1st April 1958] [Mr. Speaker]

*substitute* the following expression, namely :—

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 'and for every additional Rs. 10,000 or part thereof in excess of Rs. 30,000. | 27 | 00 | 13 | 50 | 9 | 00' |

The amendment was put and carried.

MR. SPEAKER : I have nothing more to add to this discussion. But in view of the fact that my name has been mentioned I have to say why the amendment was disallowed. This was mentioned by the hon. Member. We had to await the Governor's sanction for changing the Bill. We shall all be thankful to the hon. Member Sri Lazar for his having brought this before the House. There is only one other matter to which I wish to make a reference. The hon. the Leader of the Opposition mentioned about the short time given to Members to consider Bills. I wholeheartedly support his view because I have held that Members should be given six clear days' notice or at least five clear days' notice in respect of all Bills. The Government still come up to me to waive notice. I have done it. But one of these days I may stop this and the Government should not blame me then. We shall now proceed with the discussion of the demands.

## V.—BUDGET FOR THE YEAR 1958-59.—VOTING OF DEMANDS FOR GRANTS FOR THE YEAR 1958—59.

### DEMAND NO. IX—HEAD OF STATE, MINISTERS AND HEADQUARTERS STAFF.

THE HON. SRI C. SUBRAMANIAM : Mr. Speaker, Sir, on the recommendation of the Governor I move—

'That the Government be granted a sum not exceeding Rs. 97,68,700 under Demand No. IX—Head of State, Ministers and Headquarters staff '.

MR. SPEAKER : Motion moved—

'That the Government be granted a sum not exceeding Rs. 97,68,700 under Demand No. IX—Head of State, Ministers and Headquarters staff '.

SRI T. S. RAMASWAMY PILLAI : Sir, I move—

'That the allotment of Rs. 97,68,700 under Demand No. IX —Head of State, Ministers and Headquarters Staff be reduced by Rs. 100.'

MR. SPEAKER : Cut motion moved—

'That the allotment of Rs. 97,68,700 under Demand No. IX —Head of State, Ministers and Headquarters Staff be reduced by Rs. 100.'

MR. SPEAKER : The motion as well as the cut motion are before the House for discussion.

[1st April 1958

**Sri T. S. RAMASWAMY PILLAI :** கனம் சபாநாயகர் அவர்களே, நாங்கள் இந்த மான்ய கோரிக்கைக்கு வேறு வெட்டுப் பிரேரேபணைகளும் கொடுத்திருந்தோம். இந்தப் பிரிவு சம்மந்தமாக, பொதுவாக அமைச்சரவையைப்பற்றி ஆளும் கட்சி அங்கத்தினர்களிடமிருந்தும் எதிர்கட்சி அங்கத்தினர்களிடமிருந்தும் அபிப்பிராயங்கள் கேட்டிருந்தோம். அமைச்சரவையின் கொள்கைகள் வரி விதிப்பதிலும் சரி, அபிவிருத்திக்காரியங்களைச் செய்வதிலும் சரி, ஏழைப் பாமர மக்களின் குறைகளை கவனத்திற்கொண்டு வகுக்கப்பட்டிருக்கவில்லை என்ற முடிவிற்கு நாங்கள் வந்திருக்கிறோம்.

9-50 a.m. வரிக் கொள்கை எப்படியிருக்கிறதென்றால், இந்த ராஜ்யத்திலே உள்ள கோடானு கோடி மக்களை, விவசாயப் பாட்டாளி மக்களைப் பாதிக்கக்கூடிய அளவிலே இருக்கிறது. விற்பனை வரியை எடுத்துக்கொண்டால், உணவு தான்யங்களுக்கு விற்பனை வரி கூடாது என்று பல முறைகள் அங்கத்தினர்கள் கூறியும்கூட, அரிசிக்கும் உணவுத் தான்யங்களுக்கும் விற்பனை வரி விதிக்கப்படுகிறது. நம்முடைய தேசத்திலேயே நம் ராஜ்யத்திலும் இன்னும் ஓரிரண்டு ராஜ்யங்களையும் தவிர மற்ற ராஜ்யங்களில் இம்மாதிரி வரி விதிக்கப்படுவது கிடையாது. நம் ராஜ்யத்தில் இம்மாதிரி ஏழைகளாக இருப்பவர்கள் மீதும் வரியைச் சுமத்திக்கொண்டிருக்கிறோம் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்ளுகின்றேன். நிலவரி விதிப்பும் அம்முறையிலேதான் இருக்கிறது. ஏழை விவசாயிகள் மீது நிலவரி விதிக்கும் போது எந்த அடிப்படையில் இருக்கவேண்டுமென்றால், நாமினல் டாக்ஸாக இருக்கலாமே தவிர ஏழை விவசாயிகள் மீது அதிகமாக விதிக்கக்கூடாது என்று நாங்கள் பல முறைகளில் எடுத்துக்கூறியும், எந்தவிதமான மாற்றமும் செய்யவில்லை என்பதைப் பார்க்கிறோம்.

அதேபோல் இந்த நாட்டில் பொதுஜனக் கோரிக்கைகளைக் குறிப்பிடும் போதும், தேர்தல் காலத்தைத் தவிர இதர காலங்களில் கவனிப்பதில்லை. நாட்டிலே பல குறைகள் இருக்கின்றன. அவற்றை சட்டசபையில் கூறுகிறோம். குறைகளை எடுத்துக்காட்டுவதற்கு பல பிராந்தியங்களில் கூட்டங்கள் போட்டும், ஊர்வலங்கள் நடத்தியும், டெமோன்ஸ்ட்ரேஷன் செய்தும் பொதுஜனங்களுடைய குறைகளைக் கூறும்போது, அவைகளை என்னவென்று கேட்பதற்குப் பதிலாக, அவர்கள் என்ன சொல்கிறார்கள் என்று கேட்டு, அவைகள் உண்மையான குறைகளாக இருந்தால், நீதியான குறைகளாக இருந்தால், அவைகளை நீதி மனப்பான்மையுடன் பார்த்து, அந்தக் குறைகளைத் தீர்ப்பதற்குப் பதிலாக, அவைகளைக் கேட்பதே இல்லை என்ற நிலைமை இருக்கிறது. ஆனால், அதைப் போலீசினால்தான் தீர்க்கமுடியும், போலீசின் பலாத்காரத்தினால்தான் தீர்க்கமுடியும் என்ற நிலைமை இன்றைய தினம் வந்திருக்கிறதென்றால், அது ஜனநாயகத்திற்குப் புறம்பானது என்பதை நான் அழுத்தந்திருத்தமாகக் கூறவிரும்புகிறேன்.

அவற்றையெல்லாம் பற்றி பல மெம்பர்கள் பேசிவிட்டபடியால், அவற்றைப்பற்றிய விவரங்களுக்கு நான் செல்லவில்லை. ஆனால், ஒன்றிரண்டு விஷயங்களைப்பற்றி மட்டும் நான் இங்கே கூற விரும்புகிறேன்.

ஒரு பக்கம் போலீசினுடைய உதவியினால், பலாத்காரத்தினால், ஜனங்களுடைய கிளர்ச்சியை அடக்குவதும், இன்னொரு பக்கம் அவர்களுக்கு அனுகூலமாக இருக்கக்கூடியவர்களுக்கு ஆதரவு காட்டுவதும் இருக்கிறது என்று நான் கூறவிரும்புகிறேன். என்ன ஆதரவுகாட்டுகிறார்கள் என்பதற்கு உதாரணமாக நான் சென்ற ஆண்டிலே பட்ஜெட் சமயத்திலே, கல்லூரிகளில் மாணவர்களைச் சேர்ப்பது சம்பந்தமாக கேள்விகள் எழுப்பியது ஞாபகம் இருக்கலாம். ப்ரைவெட் கல்லூரிகள் விஷயத்தில் ஒன்றும் செய்ய முடியாது என்று சொன்ன அரசாங்கம், ப்ரைவேட் கல்லூரிகளுக்கும் கமிட்டி போடலாம் என்று சொன்னதுபற்றி நான் சந்தோஷப்படுகிறேன். கமிட்டி போட்டுவிட்டால் மட்டும் போதாது. **Fool proof arrangement** இருக்கவேண்டும். அவர்களுக்கு அதிகமாக "டிஸ்கிரஷன்" கொடுத்துவிட்டால், முதல் வகுப்பிலே தேறிய பல மாணவர்களுக்கு இடம் கிடைக்காமல், மூன்றும் வகுப்பில் தேறியவர்களுக்கும், ஒரு முயற்சியில் தேறாமல் இரண்டு மூன்று முயற்சிகளில் தேறியவர்களுக்கும் இடம் கிடைக்கும் என்ற நிலைமை ஏற்பட்டுவிடும். நல்ல திறமை மிக்க மாணவர்கள் இருக்க, திற

**1st April 1958]** **[Sri T. S. Ramaswami Pillai]**

மைக் குறைவானவர்கள் திறமை வேண்டிய கல்லூரிகளில் அனுமதிக்கப் படுகிறார்கள். அவர்களுக்கு யாராவது **God-fathers** இருக்கவேண்டும். யாராவது சிபார்சு செய்தால்தான் கல்லூரியில் இடம் கிடைக்க முடியும் என்ற நிலைமை இருக்கிறது. திறமையுள்ள மாணவர்களுக்கு இடம் கிடைக்காமல் திறமையற்ற மாணவர்களுக்கு இடம் கிடைக்கிறது. அதுபற்றி யும் இந்தச் சபையில் கேள்விகள் போட்டேன். அது முக்கியமான விஷயம். ஆனால், அந்தக் கேள்விகளுக்கு இதுவரை பதில் வரவில்லை. அதற்கு அப்ஜெக்ஷன் வந்தது. அது வரும் என்று நினைக்கிறேன். வந்தால் சபை நிச்சயமாக அறியமுடியும்.

கல்லூரியில் சேர்ந்துகொள்ளும் விஷயத்திலே தயவு காட்டப்படுகிறது என்றால், அதற்கு சால்ஜாப்பு கூறுகிறார்கள். முதல் வகுப்பில் தேறிய மாணவர்களும், நல்ல மார்க் வாங்கிய மாணவர்களும் மனுச்செய்துகொண் டிருக்க, மூன்றாவது வகுப்பில் தேறிய மாணவர்கள் சேர்த்துக்கொள்ளப் படத்தக்க அளவுக்கு இதிலும் சலுகை காட்டப்படுகிறது என்று நான் குற்றம் சாட்ட விரும்புகிறேன். இதைப் பொறுத்த அளவில் அவர்கள் ஒரு கமிட்டி போட்டிருப்பது பற்றி சந்தோஷம். ஆனால், ப்ரொ பஷனல் கல்லூரிகளில் திறமையுள்ள மாணவர்களைச் சேர்த்துக்கொள்ளக் கூடிய அளவுக்கு **fool proof arrangement** இருக்கவேண்டுமென்று நான் மீண்டும் கூற ஆசைப்படுகிறேன்.

சர்க்கார் சர்வீசுக்கு ஆட்கள் எடுக்கப்படுவது பற்றி ஒரு கேள்விக்குப் பதில் அளிக்கப்பட்டது. பப்ளிக் சர்விஸ் கமிஷன் சர்க்கார் சிப்பந்திகளைத் தேர்ந் தெடுக்கவேண்டுமென்று நம்முடைய அரசியல் சட்டம் கூறுகிறது. அரசியல் சட்டம் எதற்காக அப்படிக் கூறுகிறது என்றால், நாட்டிலே எல்லோருக்கும் சமசந்தர்ப்பம் கொடுக்கவேண்டும் என்ற காரணத்திற்காக. இது அடிப்ப டையான உரிமை. இந்த நாட்டில் ஜனநாயகம் தழைக்கவேண்டுமானால் ஒருவருக்கொருவர் வித்தியாசம் இல்லாமல், பாரபட்சம் இல்லாமல் இருக்க வேண்டுமானால், நேரடியாக பப்ளிக் சர்விஸ் கமிஷன் மூலமாக, நம்முடைய அரசாங்கத்தின் செல்வாக்குக்கு அப்பாற்பட்டிருக்கும்படி எடுப்பதுதான் நியதி என்று வலியுறுத்தி வகுத்து வைத்திருக்கிறோம். அரசியல் சட்டத் தில் நாம் அப்படி வகுத்து வைத்திருக்கிறோம். இருந்தபோதிலும் எல்லா சிப்பந்திகளையும் தேர்ந்தெடுக்கும் பொறுப்பை பப்ளிக் சர்வீஸ் கமிஷனுக்கு விடுவதற்கு பதிலாக பல முக்கியமான சர்க்கார் சிப்பந்திகளையெல்லாம் இலாகாத் தலைவர்களே **(Heads of Departments)** எடுக்கவேண்டுமென்ற நிலைமை இருக்கிறதென்றால், அதிலும் பல குறைப்பாடுகள் இருக்கின்றன என்பதையும் நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

"குறிப்பிட்டுக் கூறுங்கள்" என்று ஆளும் கட்சித் தலைவர் அவர்கள் குறிப்பிட்டார்கள். அவர்களுக்கு நான் இந்த சமயத்தில் ஒன்றிரண்டு விஷயங்களைக்கூற விரும்புகிறேன். யாருடைய பேரையும் நான் இங்கே குறிப்பிட விரும்பவில்லை. ட்ரான்ஸ்போர்டு டிபார்டுமெண்டிலேயும் எடு கேஷன் டிபார்டுமெண்டிலேயும் இன்னும் மற்ற டிபார்டுமெண்டிலேயும் நட ப்பதைப்பற்றி என்னிடம் காஷுவலாக வந்த தகவலை தெரிவிக்க விரும்பு கிறேன். அவைகளைப்பற்றி நான் ஒன்றும் விசாரணை செய்யவில்லை. என்னுடைய கவனத்திற்கு வந்ததைப் பொறுத்த வரையில் அவை திடுக் கிடும் சம்பவங்களாக இருந்தன.

உதாரணமாக, ட்ரான்ஸ்போர்ட்டிலே உள்ள உத்தியோகங்களுக்கு டிரான் ஸ்போர்டு இலாகா தலைவரே ஆட்களை நியமிக்கிறார்கள். அப்படி நியமிக்கும் போது டிபார்டுமெண்டு தலைவருடைய சொந்தக்காரர்களுக்கும் அவர் கார்டி யனாக இருப்பவர்களுக்கும் உத்தியோகங்கள் கொடுக்கிறார்கள். வயது வந்தி ருந்தாலும், வயது வந்திருக்காவிட்டாலும் குடும்பத்தில் சம்பந்தம் செய்து கொண்டுள்ளவர்களுக்கும் உத்தியோகம் கொடுக்கப்படுகிறது.

**THE HON. SRI R. VENKATARAMAN :** என்ன உத்தியோகம்?

**SRI T. S. RAMASWAMI PILLAI :** பெயரைச் சொல்கிறேன். கார் டியனருக்கு வயது 50 ஆயிருக்கும். அவருக்கு வாட்சர் வேலை கொடுக்கப்பட் டிருக்கிறது. **Nephew** க்கு க்ளார்க் வேலை கொடுக்கப்பட்டிருக்கிறது. **Niece**

ஐக் கட்டினவருக்குச் செக்கிங் இன்ஸ்பெக்டர் வேலை கொடுக்கப்பட்டிருக்கிறது, என்றால் ஜனநாயக ராஜ்யத்தில் அனுமதிக்கலாமா என்று கேட்கிறேன். காங்கிரஸ் கட்சியாக இருந்தாலும், எதிர்கட்சியாக இருந்தாலும் எல்லோருக்கும் ஒரே நியதி தான். இந்த விதமான கொள்கையை நம்முடைய அரசாங்கம் கடைப்பிடிக்கிறது என்று நான் வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறேன். அவைகளையெல்லாம் ஏன் பப்ளிக் சர்வீஸ் கமிஷன் நியமிப்பதற்கு அனுமதிக்கக்கூடாது என்று நான் கேட்கிறேன். அப்படித் தான் அண்டை ராஜ்யத்திலே செய்கிறார்கள்.

**The Hon. Sri R. VENKATARAMAN :** வாட்ச்மென் வேலைக்கு ஆட்களை நியமிப்பதுகூட சர்விஸ் கமிஷன் செய்யவேண்டுமென்று கனம் அங்கத்தினர் சொல்கிறார்களா என்று அறிய விரும்புகிறேன்.

**Sri T. S. RAMASWAMI PILLAI :** நம்முடைய ராஜ்யத்தில்தான் பப்ளிக் சர்விஸ் கமிஷன் எல்லா வேலைகளுக்கும் ஆட்களை நியமிக்கக் கூடாதென்று கருதுகிறார்கள். ஆனால், அண்டை ராஜ்யத்தில் அந்த ராஜ்யத்தின் பெயரை நான் குறிப்பிட விரும்பவில்லை. எல்லா வேலைகளுக்கும் பப்ளிக் சர்விஸ் கமிஷனே ஆட்களை நியமிக்கிறார்கள். ட்ரான்ஸ்போர்ட் இலாகாவில் கண்டக்டர் வரையில் இலாகாத் தலைவரே நியமனம் செய்துகொண்டிருந்தார். அதிலே சிபார்சுகளும் சலுகையும் இருந்ததினால் இலாகாத் தலைவரையே எல்லோரும் குனிந்து கும்பிட்டுக்கொண்டிருந்தார்கள். கடமையை நன்றாகச் செய்கின்றவர்கள் உரிமையைக் கேட்கும் போது டிஸ்மிஸ் செய்யப்பட்டார்கள் ஒருகாலத்தில். ஆனால், இப்பொழுது நியாயமாக, நேர்மையாக, நன்றாக உழைக்கக்கூடிய தொழிலாளர்களை பப்ளிக் சர்விஸ் கமிஷனே தேர்ந்தெடுக்கிறார்கள். அதுபோல் இங்கும் ஆக்கவேண்டுமென்று நான் கூறவிரும்புகிறேன்.

இன்னும் பல இலாகாக்களிலும் இதுபோல் இங்கே இருப்பதைப் பார்க்கிறோம். செர்வீசுக்கு ஆட்களை எடுத்துக்கொள்வதிலும், உத்தியோக உயர்விலும்கூட அனேக குறைபாடுகள் இருப்பதாக ஏராளமான புகார்கள் வருகின்றன.

**The Hon. Sri R. VENKATARAMAN :** ட்ரான்ஸ்போர்ட் இலாகாவில் வாட்ச்மென் பதவியைப்பற்றி மட்டும் குறிப்பிடுவதோடு நிறுத்திவிடாமல், வேறு ஏதாவது இருக்குமானால், அதையும் தயவுசெய்து உடனே கொடுக்கும்படியாக கேட்டுக்கொள்ளுகிறேன்.

**The Hon. Sri C. SUBRAMANIAM :** Sir, we are discussing each and every individual demand; Transport was discussed and Education and various other demands would no doubt be taken up and then the hon. Member can bring anything under the relevant demand. But today we are discussing Heads of State, etc., not heads of the departments. We are discussing Heads of State, Ministers and Headquarters Staff. Hon. Members are entitled to discuss the general policy so that I may answer points raised with reference to Ministers, etc. But if hon. Members come out with each and every individual department, I am sorry I may not be able to answer them immediately, unless the particular Ministers concerned take up such questions and answer them. It is not necessary to discuss now each and every individual department. Then we can have a general discussion on everything. Sir, I would respectfully submit that we should have some healthy convention as to what we should discuss under the different demands. Unless that is done and if each department is discussed, later on I should not be blamed if I am unable to answer those questions. (Interruption). If that is the state of affairs, I will not be in a position to

answer those points. May I ask if the hon. Member would be justified in raising such points which I will not be n a position to answer now?

MR. SPEAKER: While I appreciate the views of the Hon. Minister, it cannot be denied that hon. Members may perhaps raise in the course of their speeches questions which have some bearing on the demand under discussion and which comes under Ministerial responsibility. I cannot probably stop Members from referring to such things. If the Hon. Minister does not reply to them, I cannot be blamed.

THE HON. SRI C. SUBRAMANIAM: Those points will go unanswered. It is not a satisfactory state of affairs so far as this Assembly is concerned.

SRI T. S. RAMASWAMI PILLAI: That is not my fault.

THE HON. SRI C. SUBRAMANIAM: That is not your fault, I know. After all, Transport was specifically taken up and those points which were relevant could have been raised at that time. If there is not any such understanding, I have absolutely no objection to the discussion going on in any manner. I have absolutely no objection.

MR. SPEAKER: Mr. Ramaswami Pillai may now continue.

SRI M. JAGANNATHAN: Sir, the Hon. Minister was telling that he may not be in a position to answer the allegation made by the hon. Member speaking. That may be true that he may not be giving answers forthwith. But the hon. Minister who is the Leader of the House may find time—he may have ample opportunities—to go into the allegations and give answer later on.

MR. SPEAKER: Mr. Ramaswami Pillai can continue now.

SRI T. S. RAMASWAMY PILLAI: கனம் அமைச்சர் அவர்கள் கூறியதை நான் பாராட்டுகிறேன். உடனடியாகப் பதில் சொல்ல முடியாதுதான். குறிப்பாகச் சொன்னால் நாங்கள் அதைப் பரிசீலனை செய்யலாம் என்று அமைச்சர் குறிப்பிட்டதனால்தான் எனக்குத் தெரிந்த ஒன்றிரண்டு விவரங்களை மட்டும் அவர்களுடைய கவனத்திற்குச் கொண்டுவர விரும்புகிறேன். ரெக்ரூட்மெண்டு, ப்ரமோஷன் முதலியவைகளில் சலுகை காட்டப்படுவது நிர்வாகத்தையே டிமாரலைஸ்தான் பண்ணும். ஒவ்வொரு இலாகாவிலும் இன்றையதினம் என்ன நடக்கிறது என்பது எனக்குத் தெரியும். கல்வி இலாகாவை எடுத்துக்கொள்வோம். அம்மையாருக்கு மிகவும் நெருங்கிய நண்பர். ஹெட்மாஸ்டராக இருந்தவர். அவருக்கு மேலே சீனியர்கள் இருக்கிறார்கள். ஆனால் சீனியாரிடியை எல்லாம் ஓவர்லுக் பண்ணி ரொம்ப அப்பட்டமான முறையில் இவருக்கு டி.ஓ. ப்ரமோஷன் கொடுத்திருக்கிறார்கள். இப்படிப்பட்ட மனப்பான்மை நிர்வாகத்தையே குலைத்துவிடும். சீனியாரிடியை ஓவர்லுக் பண்ணி பிரமோஷன் கொடுப்பது என்பது எங்கள் ராஜ்யத்தில் முன்பு கிடையாது. மூன்று சீனியர் அக்கவுண்டெண்ட். பி.ஏ. எம்.ஏ. படித்தவர்கள். அவர்களுடைய சீனியாரிடியை ஓவர்லுக் பண்ணி ஸ்ரீ கிருஷ்ண பிள்ளை என்பவருக்கு—எஸ்.எஸ்.எல்.ஸி. தான்—கன்யாகுமரி ஜில்லாவில் ப்ரமோஷன் கொடுத்திருக்கிறார்கள். மக்கள் இதனால் எவ்வளவு அதிருப்தி அடைகிறார்கள் என்று சொல்ல முடியாது. லெஜிஸ்லேசர் டிபார்ட்டுமெண்டிலும் இதுபோன்ற காரியங்கள் நடைபெறுகின்றன என்ற

[Sri T. S. Ramaswami Pillai] [1st April 1958

தகவல் எனக்கு இருக்கிறது. அதைப்பற்றி தங்களிடம் நேரில் சொல்கிறேன். இந்தச் சபையில் கூறுவது சரியாகாது, தவறு என்று கருதுகிறேன். அட்மினிஸ்ட்ரேஷனைப் பொறுத்த வரையில் இங்கே உயர்ந்த அதிகாரிகளுக்கு மிகவும் அதிகமாக ஆகிறது. டபுள் செலவு ஆகிறது. பல ராஜ்யங்களோடு ஒப்பிடும்போது இங்கே அதிகமாக இருக்கிறது. உதாரணமாக அஸ்ஸாமில் 76 சத விகிதம் பர் காபிடா, பீஹாரில் பார்க்கும்போது .05 பர் காபிடா. மத்திய பிரதேசத்தில் பார்க்கும்போது 0.15 பர் காபிடா, மெட்ராசில் 1.25 இங்குதான் இரண்டு மடங்கு ஆகிறது. இதை நிச்சயமாக நாம் பரிசீலனை செய்து பார்க்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். இந்தச் செலவு குறைய வேண்டும். நம்முடைய ராஜ்யத்தில் நல்ல ஜனநாயகப் பண்பாடு, நிர்வாக ஒழுங்கு அமைப்பு இருக்கவேண்டுமென்றால் சர்வீசில் சலுகை காட்டுவது, ரெக்ரூட்மெண்டை பப்ளிக் சர்விஸ் கமிஷனுக்கு அப்பாற்பட்டதாகச் செய்வது போன்ற காரியங்கள் நடைபெறக்கூடாது. எதிர்க்கட்சியைப் பழிவாங்கும் தன்மை வளரக்கூடாது. அண்ணாமலை யூனிவர்ஸிடியைப்பற்றிப் பேசவில்லை. சுமுகமாக அது தீரவேண்டும் என்ற காரணத்தினால் பேசாமல் விட்டு விடுகிறேன். எல்லோரும் இந்த நாட்டில் நல்லதொரு ஜனநாயக நிர்வாகத்தை அமைப்பதற்கு பாடுபடவேண்டுமென்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

MR. SPEAKER : I have to inform the House that only six hon. Members have so far given their names for speaking on this Demand and I shall be happy if no more hon. Members give their names. But if at a later stage hon. Members want to participate in the discussion on this Demand, I will have to ration time. So, those hon. Members who want to speak can give their names to me. For the present, I will not fix any time-limit for speeches.

10–05 a.m. * SRI P. U. SHANMUGAM : சட்டமன்றத் தலைவர் அவர்களே, ஹெட் குவார்டர்ஸ் ஸ்டாப் சம்பந்தப்பட்ட மானியத்திற்கு ஸ்ரீ ராமசாமி பிள்ளை அவர்கள் கொண்டுவந்திருக்கிற வெட்டுப் பிரேரணையை ஆதரிக்கும் வகையில் நான் எனது கருத்துக்களைத் தெரிவிக்கிறேன். நான் சார்ந்திருக்கிற திராவிட முன்னேற்றக் கழகத்தினர் சொல்வது போல-கவர்னர் பதவியைக் குறித்து அது நம் நாட்டுக்குத் தேவைதானா என்பதைக் கூற விரும்புகிறேன். என்னைக் கேட்டால், கேட்கமாட்டார்கள். கேட்கவேண்டுமென்று எதிர்பார்க்கவில்லை. பொதுவாக கவர்னர் பதவி என்பது நம்முடைய ஜனநாயக நாட்டுக்கு, ஏழை நாட்டுக்குத் தேவையில்லை என்பதை வலியுறுத்த வேண்டுகிறேன். நமது அரசியல் சட்டத்தில் ஏற்றுக்கொண்டாய்விட்டது என்ற காரணத்தினால் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று சொல்வது பொருத்தமல்ல. அதற்காக நமக்கு ஆகும் செலவு என்ன, அது அவசியம்தானா, நேர்மைதானா, நியாயம்தானா என்பதைச் சிந்தித்துப் பார்த்து அது அவசியம்தானா என்பதை ஏழைபங்காளர்களாகிய காங்கிரஸ்காரர்கள் ஆட்சியில் அவசியமானதை, தேவையானதை, நியாயமானதைச் செய்யவேண்டும் என்பதாகக் கேட்டுக் கொள்கிறேன். இதைப்பற்றி அவர்கள் மீண்டும் சிந்திக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். கவர்னருடைய சம்பளத்திற்காக இந்த ஏழை நாட்டில் 58,309 ரூபாய், என்றும், விருந்து உபசாரத்திற்காக 20 ஆயிரம், காரியதரிசி, காரியாலய செலவு, ரூ. 53,893 என்றும், தோட்டத்திற்காக 70,910 என்றும், இஷ்டப்படி நன்கொடை அளிக்க 19,946 ரூபாய் என்றும், சுற்றுப்பிரயாணத்திற்காக 60 ஆயிரம் ரூபாய் என்றும், ஜனாதிபதிக்கு விருந்துவைக்க 1 லட்சத்து, 20 ஆயிரம் ரூபாய் என்பதாகவும், மின்சாரத்திற்காக 55 ஆயிரம் என்றும், தண்ணீருக்கு 17 ஆயிரம் என்றும் ஏராளமான பணங்கள் செலவாகிக்கொண்டிருக்கின்றன. என்.ஜீ ஓ.க்களுக்கு சம்பளம் கூட்டவேண்டுமென்றால் பணம் இல்லை என்று சொல்லப்படும்போது கவர்னருடைய தோட்டத்திற்காக 70,910 ரூபாய் செலவாகிறது என்றால் (கனம் ஸ்ரீ ஆர். வெங்கட்டராமன் :—தோட்ட செலவு என்றால் எத்தனையோ தோட்டக்காரர்களாகிய

ஏழைகளுக்குத்தான் அவை போகிறது.) *அப்படி நிதி மந்திரி அவர்கள் சொன்னால் ஒத்துக்கொள்கிறேன். பணம் செலவழிப்பதற்கு நியாயமான, தேவையான, காரணங்களை சொன்னால் என்னை திருத்திக்கொள்ள முடியும். அதிலுள்ள நியாயமற்ற தன்மையை உணர்ந்து கொண்டால் அவர்களே தங்களைத் திருத்திக்கொள்ள முன் வருவார்கள் என்று நம்புகிறேன். கவர்னர் மாளிகையை ஒவ்வொரு ஆண்டும் செப்பனிடுவதற்காக மட்டும் மூவாயிரக்கணக்கான ரூபாய்கள் ஆகிறது என்றால் இது அவசியமா ? அதுவுமின்றி ஒரு புகார் ஒன்று சொல்லப்படுகிறது. இந்தப் புகார் உண்மையோ, உண்மையில்லையோ தெரியாது. ருமேனிய நாட்டுப் பிரதம மந்திரிக்கு கவர்னர் மாளிகையில் மேல்நாட்டுச் சாராயம் வழங்கியிருக்கிறார்கள். (கனம் ஸ்ரீ ஸி. சுப்பிரமணியம் :—மேல்நாட்டுச் சாராயம் கொடுக்கப்படவில்லை. விருந்துச் செலவு அவர்களுடையது.)

சர்க்கார் செலவில் இல்லை என்று குறிப்பிட்டு விட்டார். மகிழ்கிறேன். மதுவிலக்கு நிலவும் நாட்டில் இப்படிச் செய்யலாமா என்றுதான் நான் கேட்கிறேன் ? அப்படிச் செலவு செய்தது சர்க்கார் செலவில் இல்லை என்று கூறி விட்டதால் நான் கூறியதற்கு வருந்துகிறேன். எனக்கு கிடைத்த புகார்களை வைத்துச் சொல்கிறேன். அடுத்து, சென்னை மாநிலம் தமிழர் வாழும் இடம், தமிழ் மொழி வாழும் இடம். அப்படிப்பட்ட ஒரு நாட்டிற்கு தமிழ் நாடு என்று பெயர் வைக்க மறுக்கும் இந்த அரசாங்கத்தை குறை கூறாமல் என்னால் இருக்கமுடியாது. அதைப்பற்றி இந்த மான்யத்தின் மீது ஏன் சொல்கிறீர்கள் என்று கேட்கலாம். இந்த மான்யம் ஹெட்ஸ் ஆப் ஸ்டேட்ஸைப் பற்றியதாகும். ஆதலால் சொல்கிறேன். இந்த மாநிலத்திற்கு தமிழ் நாடு என்று பெயர் வைக்க இந்த அரசாங்கம் மறுத்திருப்பது, தமிழர்கள் வெட்கப்படவேண்டிய காரியமாகும். தமிழ் நம் தாய் மொழி என்று சொல்கிறார்கள், தமிழ் மொழியை நாம் நடைமுறையில் ஆட்சி மொழியாக ஏற்றுக்கொள்கிறோம். ஆனால் இந்த நாட்டுக்கு தமிழ் நாடு என்று பெயர் வைக்க மறுக்கப்படுகிறது. அமைச்சர் சுப்பிரமணியம் அவர்கள் " தமிழ் நாடு " என்ற பெயர் இலக்கியத்தில் இல்லையென்று சொல்லியிருக்கிறார்கள். இலக்கியத்தில் நெடுந்தூரம் அழைத்துச் செல்லா விட்டாலும் கூட பாரதியாரின் ஒரு பாடலையாவது அவரது நினைவிற்கு இத்தருணத்தில் கொண்டு வர விரும்புகிறேன்.

" நீலத்திரைக் கடலோரத்திலே நின்று நித்தம் தவம் செய்யும்
குமரி எல்லை, வட மாலவன் குன்றம் இவற்றிடையே
புகழ் மண்டிக் கிடக்கும் தமிழ் நாடு ",

என்று தமிழ் நாட்டைப் பற்றி பாரதியார் பாடி விட்டுப் போனார். இந்த நாட்டை தமிழ் நாடு என்று சொல்ல ஏனோ இந்த அமைச்சரவை மறுக்கிறது. எனக்கும் புரியவில்லை. அங்ஙனம் தமிழ் நாடு என்று பெயர் வைக்காது, தமிழ் நாடட அமைச்சர் என்று தங்களைச் சொல்லிக் கொள்ளாது சென்னை ராஜ்யத்து அமைச்சர்கள் என்று சொல்லிக் கொள்வதில் ஏனோ பூரிப்படைகிறார்கள். தமிழ் நாட்டு மக்கள், தமிழர்கள் தரும் வரிப்பணத்தில் இருந்து ஆட்சி நடத்தும்போது, அதுவும் பச்சைத் தமிழர்கள் இந்த மன்றத்தில் இருக்கும்போது ஏனோ நம் நாட்டிற்கு தமிழ் நாடு என்று பெயர் வைக்க மறுக்கிறார்கள். இது, நம் நாடு செய்திருக்கும் துர்பாக்கியம்தான் என்று சொல்லிக் கொள்வதோடு நிறுத்திக் கொள்கிறேன். வெளியில் செல்லும்போது காங்கிரஸ் கூட்டங்களில் அமைச்சர்கள் கலந்து கொள்கிறார்கள் என்று குற்றஞ் சாட்டப்படுகிறது அதற்கு நிதியமைச்சர் அவர்கள், எல்லாக் கூட்டங்களிலும் நாங்கள் கலந்துகொள்வது கிடையாது, போகும் இடங்களில் எங்கள் கட்சி அங்கத்தினர்களையும் சந்திக்கிறோம், அவர்கள் பொதுக் கூட்டங்களில் கலந்து கொள்ள வேண்டுமென்று சொன்னால் கலந்து கொள்கிறோம் என்றார்கள். அப்படி பொதுக் கூட்டங்களில் கலந்து கொள்வதைப்பற்றி யாரும் புகார் சொல்லவில்லை. அப்படி கூட்டங்களில் பேசும்போது தங்கள் கட்சி செய்திருக்கும் சாதனைகளைப்பற்றி எடுத்துக்கூறுவதிலும் நாங்கள் ஆட்சேபம் சொல்லவில்லை. ஆனால் நாங்கள் சொல்வதெல்லாம், நீங்கள் எங்கு போய் பேசினாலும் திராவிட முன்னேற்றக் கழகத்தையே தாக்கி பேசுவதை குறிக்கோளாக கொண்டிருக்கிறீர்கள், அப்படி அதற்கு சர்க்கார்

பணத்தை, கஜானுவில் உள்ள பணத்தை கை வைக்கிறீர்கள். ஆகவே, நாங்கள் சொல்வது, எங்களைப் பற்றி குறை சொல்ல நீங்கள் சர்க்கார் பணத்தை உபயோகிப்பதுபற்றித்தான் குறை சொல்லுகிறேம். அது நியாய மில்லை என்று தான் சொல்கிறேன். அடுத்து, இந்த அமைச்சரவையில் உள்ளவர்களின் கார் விபத்துக்களைப் பற்றி சொல்ல விரும்புகிறேன். தெற்கே என்று நினைக்கிறேன், அமைச்சர் அவர்களின் பெயரை நான் குறிப்பிட விரும்பவில்லை, நாகரீகத்தின் காரணமாக. ஒரு அமைச்சரின் காரை இன்னொரு அமைச்சரின் பிள்ளை எடுத்துச் சென்று எங்கேயோ இடித்து இருக்கிறர். அதுப்பற்றி போலீஸ் வழக்கு பதிவு செய்தார்கள். அந்த வழக்கு என்னவாயிற்றோ தெரியவில்லை. அந்தக் காரை நான் டி. வி. எஸ்ஸில் பார்த்தேன். அப்பொழுது அங்குள்ள அதிகாரி சொன் ஞர்கள், அந்தக் கார் இனி பயன்படாது, அதை கண்டெம் செய்து விட்டோம் என்று. ஆக சர்க்காரின் சொத்து ஒரு அமைச்சரின் பிள்ளை யால் பாழாக்கப்பட்டிருக்கிறது என்று சொல்கிறேன். இது நியாயமா என்று அமைச்சரவையை நான் கேட்கிறேன்? அடுத்து வேறு ஒரு புகாரை அமைச்சரவையின் கவனத்திற்கு கொண்டு வர விரும்புகிறேன். நெய்வேலிக்குப் போக வேண்டுமென்ற கருத்தை சென்னை மாநிலத் தைச் சார்ந்த என்ஜினியர்கள் நெய்வேலிக்குப் போகவேண்டுமென்று மனு போட்டால் அதை சென்னையில் இருக்கிற சீப்–இன்ஜனியர் அந்த மனுவை அனுப்புவதில்லை என்று புகார் கூறப்படுகிறது. அது, எவ்வளவு தூரம் உண்மையோ அல்லது உண்மைக்கு மாறனதோ தெரியவில்லை. ஆகவே, அதைப்பற்றி அமைச்சர் அவர்கள் விளக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அந்நிலை இருக்குமானல் தயவு செய்து அதை மாற்றியமையுங்கள் என்று கேட்டுக்கொண்டு எனது சிற்றுரையை முடித் துக்கொள்கிறேன், வணக்கம்.

* **Sri V. SANKARAN** : சபாநாயகர் அவர்களே, இந்த மான்யத்தை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். இது போன்ற சமயங்களில், ஒரு சிலர் கூறுகிறர்கள், அமைச்சர்கள் அடிக்கடி அதிகமாக சுற்றுப்பிரயாணம் செய்கிறர்கள், என்று, ஒரு சில அங்கத்தினர்களும், அவ்வாறு அடிக்கடி சுற்றுப்பிரயாணம் செய்யாவிட்டால் அமைச்சர்கள் மக்களோடு தொடர்பு வைத்துக்கொள்ள முடியாமல் போய் விடும் என்று வேறு சில அங்கத்தினர்களும் கூறுகிறர்கள். அதே போன்று ஆடம் பரச் செலவுகளுக்கும், போலீசுக்கும் அதிகம் பணம் செலவு செய்யப் படுகிறது என்றும் குறை கூறப்படுகிறது. ஆனல் அப்படி போலீஸ் பாது காப்பு குறைவாக இருந்து ஏதாவது அசம்பாவிதமோ அல்லது விபத்தோ ஏற்பட்டால், ஏன் போதிய போலீஸ் பாதுகாப்பு வைத்துக்கொள்ளக் கூடாது, அதற்குக் கூட பணம் இல்லையா என்றும் ஒரு சில அங்கத்தி னர்கள் கேட்பார்கள். அதேபோன்று ஒரு சிலர் கவர்னருக்கு ஏன் இப்படி அதிகமாக பணம் செலவு செய்யப்படுகிறது என்றும் கேட்கிறர்கள். வேறு சிலர், வெளி நாடுகளில் இருந்து விருந்தினர்கள் வந்து கவர்னர் மாளிகையில் தங்கும்போது அவர்களை கௌரவிக்க தக்கப்படி செலவு செய்யவேண்டியதுதான் தகுந்த அந்தஸ்து கொடுக்க செலவு செய்ய வேண் டியதுதான் என்றும் ஒரு சிலர் கூறுகிறர்கள். ஆக, இப்படி ஒவ்வொரு வரும் ஒவ்வொரு விதமாக சொல்லிக் கொண்டிருந்தால் காரியங்களை எப்படி நடத்த முடியும்? ஒரு கிழவன், ஒரு பேரன், ஒரு கழுதை என்ற பழங்காலக்கதை மாதிரித்தான் ஆகும். ஆகவே, நான் சொல்ல விரும்பு வது என்னவென்றல், சர்க்கார் தங்களுக்கு எது நியாயம், நல்லது நல்ல முறையில் எதைச் செய்ய வேண்டுமென்று சர்க்காருக்குத் தோன்று கிறதோ அதைச் செய்து கொண்டு போகவேண்டும்.

அடுத்தபடியாக, சர்க்கார் ஒரு குறிப்பிட்ட விஷயத்தில் போதிய உறுதி யும் கண்டிப்பும் காட்டவில்லை என்று எடுத்துக் கூற விரும்புகிறேன். அதாவது, கடந்த சில மாதங்களுக்கு முன்னல் ஜாதி ஒழிப்பு என்ற பெயரால் ஒரு கட்சி பிரசாரம் செய்தது. ஜாதி வித்தியாசத்தை ஒழிக்க வேண்டுமென்று அவர்கள் வலியுறுத்தவில்லை. ஆனல் அதற்கு மாறக அவர்கள் ஒரு குறிப்பிட்ட ஜாதியையே ஒழிக்கவேண்டுமென்று பிரசாரம்

1st April 1958] [Sri V. Sankaran]

செய்து வந்தார்கள். ஒரு சிலர் நினைக்கலாம், கேட்கலாம் ஏன் நான் பழங்கதையைப் புரட்டுகிறேன் என்று. ஏன் நான் ஆறிய புண்ணை கிளறு கிறேன் என்று கேட்கலாம். இந்தப் புண் பூரணமாக ஆறிவிட்ட புண் அல்ல சமயம் கிடைக்கும்போது, மறுபடியும் கிளைத்துக்கொள்ள தயாராக இருக்கிறது. அந்தக் குறிப்பிட்ட கட்சித் தலைவர் அப்பொழுது சொல்லி யிருக்கிறார், தாற்காலிகமாக இப்போராட்டம் நிறுத்தப்பட்டிருக்கிறது என்று கூறினாரே தவிர அதை பூர்ணமாக நிறுத்தி விட்டோம் என்று அறிவிக்க வில்லை. இப்போது அந்த வன்முறைக்கு அவசியமில்லை என்று தான் கூறினார். ஆகவே, சர்க்கார் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். அந்த எரிமலை எப்பொழுது திரும்ப வெடிக்குமோ, அந்தத் தீக்குழம்பு மறுபடி எப்பொழுது கிளம்புமோ தெரியாது. ஆகவே, சர்க்கார் இவ்விஷ யத்தில் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன். அந்தக் கட்சி சார்புள்ள பல பத்திரிகைகள், " "ஈரோட்டுப்பாதை", "விடுதலை" போன்ற பத்திரிகைகள் பல தடவை பலவிதமாக பிராமணர்களை ஒழிக்க வேண்டும், பிராமணர்களை இங்கிருந்து வெளியேற்றவேண்டும், இரண்டாவது கட்டமாக அவர்களது குடுமியை அறுக்கவேண்டும், அவர்களது பூணூலை அறுக்கவேண்டும் என்றெல்லாம் எழுதியது. அவ்விதம் வகுப்புத் துவேஷத்தைப் பரப்பி, வன்முறைச் செயல்களை வலியுறுத்தி எழுதிய பத்திரிகைகள் பேரில் உடனடியாக சட்ட நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டிருக்க வேண்டும், அப்படி ஏன் அவை கள் மீது உடனடியாக நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளவில்லை என்று தான் நான் கேட்கிறேன்? ஆளும் கட்சியைச் சேர்ந்தவன் அந்தக் கட்சி யைப்பற்றியே குறை கூறுகிறானே என்று சிலர் நினைக்கக்கூடும். மக்க ளின் தேவைகளையும், மக்களின் குறைகளையும் எடுத்துக் கூறுவதற்குத் தான், நாம் இங்கு மக்களின் பிரதிநிதிகளாக வந்திருக்கிறோம். கட்சியை வளர்ப்பதற்காக பேசுவது என்பது பீச் மேடையிலோ அல்லது திலகர் சதுக்கத்திலோதான், அந்த வேலை இந்த சபையில் நமக்கு இல்லை. இங்கு இந்த சபையில் நாம் பேச வேண்டியது, மக்களின் பிரதிநிதிகள் என்ற ஹோதாவில் மக்களின் தேவைகளையும், அவர்களின் குறைகளையும், மக்களில் எந்தப் பிரிவினரும் அவமதிக்கப்பட்டாலும், கௌர வம் பாதிக்கப்பட்டாலும் அதற்குப் போதிய நடவடிக்கை எடுக்கப்படா விடில் அவைகளை எடுத்துக் கூற வேண்டியது மக்களின் பிரதிநிதி களாகிய நமது முதற் கடமையாகும் என்று இங்கு எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். அரசாங்கத்தின் அன்றாட நடைமுறையில் தவறுகள் இருந்தால் எடுத்துக்காட்டி திருத்தி மக்கள் நன்மைக்காகவே, ஆட்சி நடைபெறச் செய்யாவிடில் நாம் கடமையிலிருந்து தவறியவர்கள் ஆவோம் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

நம் தொகுதியிலுள்ள எல்லா, பிரிவு வகுப்பு, மக்களுடைய ஆதரவும் 10-20 a.m. வேண்டும் என்ற கருத்தில் தான் நாம் இங்கு வந்திருக்கிறோம். எந்த பிரிவு மக்களுடைய உரிமையும் கௌரவமும் பாதிக்கப்படாத வகையில் நாம் அவர்களுடைய உரிமையை பாதுகாக்க வேண்டும். எல்லா பிரிவு மக்களுடைய ஆதரவும் நமக்கு வேண்டும். அதற்கு போதிய பாதுகாப்பு இல்லையானால் நாம் தான் அந்த பிரிவு மக்களுக்கு ஜவாப் சொல்லியாக வேண்டும். எந்த முறையிலும் எந்த பிரிவு வகுப்பு மக்களுடைய கௌரவமோ, மதிப் போ, உரிமையோ பாதிக்கப்படாமல் இருக்கவேண்டும். அவ்விதம் ஏதாவது பாதிக்கப்பட்டால் நாம் தான் அதற்கு ஜவாப்தாரி என்பதை நாம் மனதில் கொள்ளவேண்டும். எந்த கட்சியாய் இருந்தாலும் சரி இம்மாதிரி விஷயங்களில் சரியான விதத்தில் சர்க்கார் பாதுகாத்தால் தான் மக்கள் சர்க் கார்மேல் நம்பிக்கை கொள்வார்கள் என்பதை உணரவேண்டும். நான் கடை சியாக கேட்டுக் கொள்வது, இனிமேலாவது, இம்மாதிரி வகுப்பு துவேஷ பிரசாரங்களிலோ அல்லது சமூக விரோதமான காரியங்களில் ஈடுபட்டால் அந்த கட்சிகளின் மீதும் கட்சி பத்திரிகைகளின் மீதும் உடனடியாக சட்டபூர்வ மாக நடவடிக்கைகள் எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இனியாவது சமூக விரோதமான காரியங்கள் ஏற்படுவதற்கு காரணமாக எந்த கட்சியாக இருந்தாலும் சரி, கக்ஷிப் பத்திரிகைகளாவது இருந்தாலும் பேச்சின் மூலமாகவோ எழுத்தின் மூலமாகவோ தூண்டிவிடுவதாக இருந்தால் அதன்

[Sri V. Sankaran] [1st April 1958

பேரில் கடுமையான நடவடிக்கை எடுத்து தக்க தண்டனை கொடுக்க வேண்டு மென்று கேட்டுக் கொள்கிறேன். அதற்கும் மேலாக இனிமேல் இம்மாதிரி காரியங்கள் பேச்சு எழுத்து அல்லது செயல்மூலமாக நடந்தால் இதில் ஈடுபட்டவர்கள் கடுமையாக தண்டிக்கப்படுவார்கள் என்று குறிப்பாக முதன் மந்திரி உட்பட எல்லா மந்திரிகளும் உடனுக்குடன் கண்டன அறிக்கைகள் வெளியிட வேண்டும். அப்போது தான் பாதிக்கப்பட்ட அந்த பிரிவு மக்களுக்கு ஓரளவு ஆறுதல் ஏற்படும். இந்த முறையில் இனிமேலாவது சர்க்கார் கண்டிப்பாகவும் உறுதியாகவும் நடந்து கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். இந்த விஷயம் இன்றோடு நின்று விடுவ தாக தெரியவில்லை. அதோடு பத்திரிகைகள் இவ்விதமான சமூக விரோத வகுப்பு துவேஷ காரியங்களை தூண்டி விடும்பொழுது சர்க்கார் அதன் பேரில் மிகுந்த கண்காணிப்பாக இருக்க வேண்டும். இனிமேல் சமூக விரோதமான காரியங்களை தூண்டுவதற்கு எந்த கட்சி காரணமாக இருந் தாலும் அதன் சார்புள்ள பத்திரிகைகள் பேரில் சர்க்கார் கண்காணிப்பு வைத்துக்கொள்ளவேண்டும். அதோடு அவ்விதம் எழுதும்போது அதன் பேரில் தக்க சட்ட நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள் கிறேன்.

பொதுவாக தேர்தல் வரும் சமயத்தில் எல்லா பிரிவு மக்களையும் ஆதரவிற்காக அணுகும் ஒரு நிலைமை ஏற்படுகிறது. சரியான பாதுகாப்பு கொடுக்காவிடில் அந்த சமயத்தில் திரும்பிக்கொள்வார்கள். பழைய காலத்திலுள்ள ஒரு பொம்மையை நாம் எல்லாம் பார்த்திருப்போம். மாக்னெட் (காந்த சக்தி) வைத்த இரண்டு பொம்மைகள் உண்டு. அதா வது ஒன்றில் ராவணன் தலை ஒரு பக்கம் இருக்கும், ராமன் தலை மற்றொரு பக்கம் இருக்கும். இன்னொரு பொம்மை அனுமார் பொம்மை ராவணனன் தலையைப் காட்டினால் உடனே அனுமார் திரும்பிக்கொள்ளும். அதே மாதிரி தேர்தல் காலத்தில் பாதிக்கப்பட்ட திரும்பிக் கொள்ளும்படி யான ஒரு நிலைமை ஏற்படுகிறது. ஆகவே இந்த விஷயத்தில் தக்க கவனம் செலுத்த வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக மெடிக்கல் காலேஜ் லெக்சரர்கள் சம்பந்தமாக ஒன் றிரண்டு வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். அதாவது அவர்களுக்கு கொடுக்கப்படும் டீச்சிங் அலவன்ஸ்-ம் நான்-பிராக்டிகல் அலவன்ஸ்-ம் லீவு சமயத்தில் கொடுக்கப்படுவதில்லை. இதனால் அவர்களுக்கு பலவித கஷ்டங்கள் ஏற்படுகிறது. ஆகவே அவர்களுக்கு லீவு சமயத்தில் இந்த அலவன்ஸ்-கள் கொடுக்கப்பட வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு ரிஸர்ச் சம்பந்தமான படிப்புக்கு டீச்சிங் ஸ்டாப்-க்கு ஈடுபடுவதற்கு வேண்டிய வசதிகள் அதிக பண சலுகைகள் கூட செய்து கொடுக்கப்பட வேண்டும். ஏழ்மை ஸ்காலர்ஷிப் சம்பந்தமாக எல்லா ஏழைகளுக்கும் இப்போது சரியாக ஸ்காலர்ஷிப் கொடுக்க வில்லை என்று தெரிகிறது. ஆனால் ஏழைகளெல்லாம் மிகக் கஷ்டப்பட்டு ஒரு தனிப்பட்ட வகுப்பில் பிறந்ததனால் அல்ல ஆனால், ஏழ்மையிலிருந்து வெளிவர வேண்டும் என்ற ஆத்திரத்தோடு படிக்கிறார்கள். அந்த ஆத்திரம் அதிகரிக்க அதி கரிக்க அதிக திறமையுடன் படிக்கின்றார்கள். ஆகவே, ஏழைகள் விஷயத் தில் பாகுபாடு இல்லாமல் எல்லா ஏழைகளுக்கும் திறமைக்கு தகுந்தபடி ஸ்காலர்ஷிப் கிடைக்க வழி செய்ய வேண்டும். இன்னொரு விஷயம் என்னவென்றால் ஹிந்துமத பரிபாலன போர்டின் கீழ் பல கோயில்கள் இருக்கின்றன. அதில் ஒரு சில கோயில்கள் போதிய நிதி படைத்து இருக்கிறது. அதில் வேலை செய்யும் ஊழியர்களுக்கு சேவகர்களுக்கு 40 ரூபாய், 50 ரூபாய், 60 ரூபாய் என்று தான் 10, 20 வருட சர்வீஸிற்குப் பிறகும் சம்பளங்கள் இருந்து கொண்டிருக்கிறது. அவர்களுக்கு போதிய ஊதியம் கொடுக்கப்படவேண்டும். ரூல்ஸ்-களில் வகை செய்ய வேண்டும். அதோடு அவர்களுக்கு மற்ற சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கு இருப்பது போல பிராவிடண்டு பண்ட், பென்ஷன் போன்ற வசதிகள் செய்து கொடுப் பதற்கு ரூல்ஸ்-களில் இடமளிக்கப்படவேண்டும். இன்றைக்கு அந்த நிர்வாகத் தின் அஸ்திவாரமாக இருக்கக்கூடிய சேவகர்கள், கிளார்க்குகள் இவர்களுக்கு சம்பளம் மிக குறைவாக இருக்கிறது. இருபது வருஷமாக வேலை பார்த்து

வரும் கிளார்க்குகளுக்கு 60 ரூபாய், 80 ரூபாய் என்று தான் சம்பளம் இருந்து கொண்டிருக்கிறது. 65 வயதான பிறகும் பியூன் வேலை செய்த ஆள் வெறும்கையோடு தான் வெளியே வரவேண்டியிருக்கிறது. வெளியே வந்து பிச்சை எடுத்துக் பிழைக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. நான் நேரில் பார்த்திருக்கிறேன். அவர்களில் சிலர் பிச்சை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். **Hindu Religious Endowment Board** ஒரு **Institution** தான். ஆகவே, இவர்களுக்கு வேண்டிய நன்மைகளை செய்து கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டு இந்த மான்யத்தை ஆதரித்து என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன்.

**Sri N. K. PALANISAMI :** சேர்மென் அவர்களே, இன்றைய தினம் இங்கு வந்திருக்கக்கூடிய திருத்தப்பிரேரணையை நான் ஆதரிக்கிறேன். இன்றைக்கு இருக்கக்கூடிய முறையில் நிர்வாகங்கள் எந்த முறையில் நடைபெறுகின்றது என்பதை பார்ப்போமானால் பிரிட்டிஷ் காலத்தில் டாட்டன்ஹாம் முறையில் நடைபெற்றதைபோல் இப்போதும் கையாளப்பட்டு வருகிறது. இந்த முறையிலிருந்து மாற்றங்கள் ஏற்படுத்தவில்லை. உதாரணமாக பார்ப்போமானால் நிர்வாக முறையில் நடந்துகொண்டிருக்கின்ற அமைப்பைப் பார்ப்போமானால் அந்தந்த ஹெட்ஸ் ஆப் டிபார்ட்மெண்ட்ஸ்-ல் எக்ஸாமின் என்று போட்டு விடுவார்கள். அது அப்படியே கிளார்க்குகள் வசம் போய் விடுகிறது. கிளார்க்குகளுக்கு அதிலுள்ள விஷயங்களே தெரியாது. இவ்விதம் ஒவ்வொரு டிப்பார்ட்மெண்டிலும் அப்படியே மாத கணக்கில் தங்கி விடுகிறது. மேலும் கலக்டர் ஆபீஸ்களில் அங்கு இருக்கக்கூடிய வசதி குறைவினால் அங்கேயும் பைல்கள் எல்லாம் தங்கிவிடுகின்றன. ஆகவே அங்கு அதிகப்படியான ஊழியர்களை நியமிக்க வேண்டும். அதுமட்டுமல்ல, நிர்வாகத்தில் பல தலையீடுகள் நடக்கிறது. கலக்டர் எவிக்ஷன் பண்ணுவதற்கு வேண்டிய சிபாரிசு பண்ணி அனுப்பினாலும்கூட சில செல்வாக்குள்ள நபர்கள் இதில் தலையிட்டு இதற்கு "ஸ்டே ஆர்டர்" வாங்கி கொடுத்துவிடுகிறார்கள். அது மட்டுமல்ல, ஜமீன் ஒழிப்புக்காக மூன்று ஜட்ஜ்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். இவர்கள் இதுவரை என்ன வேலை செய்திருக்கிறார்கள் என்று யாருக்கும் தெரியாது. உண்மையாகவே இவர்கள் ஜமீன் பிரதேசங்களில் சுற்றிப்பார்த்து எங்கெங்கு என்னென்ன வேலைகள் செய்யவேண்டும் என்கிற முறையில் அவர்கள் வேலை செய்தால் மிக நன்றாக இருக்கும். அவர்கள் எந்த இடத்திற்கும் போனதாக தெரியவில்லை. அவர்கள் இதுவரையிலும் சரியான நடவடிக்கைகள் எடுத்ததாக தெரியவில்லை. மேலும் தக்காவி கடன் கொடுப்பதில், கடன் கொடுக்கக்கூடிய சமயத்தில் சாதாரணமாக ஏழை எளிய மக்களுக்கு கொடுப்பதில்லை. பத்தாயிரம் ஏக்கர்களை வைத்துக் கொண்டிருக்கும் குன்னியூர் சாம்பசிவ அய்யர் போன்றவர்களுக்குத்தான் கொடுக்கப்படுகிறது.

**Sri R. SRINIVASA IYER :** பல தடவைகள், இம்மாதிரி தனி நபர்களை குறிப்பிட்டு பேசக்கூடாது என்று சொல்லியிருக்கக்கூடிய சமயத்தில் குன்னியூர் சாம்பசிவ அய்யர் 10 ஆயிரம் ஏக்கர் வயல் வைத்திருக்கிறார் என்று சபையில் வைத்து பேசலாமா ?

**Sri M. D. RAMASAMI (Temporary Chairman) :** கனம் அங்கத்தினர் அவர்கள அவ்விதம் பேசவேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறேன்.

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** இம்மாதிரி எங்கே, எப்போது கடன் கொடுக்கப்பட்டது என்பதை விவரமாக சொன்னால் நல்லது.

**Sri N. K. PALANISAMI :** இந்த கடன் பற்றி, கலக்டர் அவர்கள் கொடுக்கவேண்டாம் என்று எழுதியும், பைனான்ஸ் டிபார்ட்மெண்ட் கொடுக்க வேண்டிய அவசியமில்லை என்று சொன்ன பிறகும் இந்த கடன் கொடுக்கப்பட்டதாக சொல்லப்படுகிறது. ஆகவே இதில் என்ன நடந்தது என்பதைப்பற்றி கனம் அமைச்சர் அவர்கள் சொல்லுகிற நேரத்தில் தெளிவு படுத்தவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். அது மட்டுமல்ல, அதிகாரம் ஒரே இடத்தில் குவிந்து கிடக்கிறது. இவ்விதம் அதிகாரம் ஒரே பக்கத்தில் குவிந்து இருப்பதால் மக்களுக்கு பலவிதமான கஷ்டங்கள்

[Sri N. K. Palanisami] [1st April 1958

ஏற்படுகிறது. சாதாரணமான பொது மக்களிடமிருந்து அனுப்பப்படும் விண்ணப்பங்கள் எல்லாம் திரும்பி வருவதற்கு அனேக மாதங்கள் ஆகிறது. ஆகவே, அங்கங்கே இருக்கக்கூடிய கலக்டர் போன்ற அதிகாரிகளிடத்தில் அதிகாரங்களை பகிர்ந்து கொடுக்கவேண்டும்.

10 30 a.m. இன்னும் "ஆண்டி கரப்ஷன்" டிபார்ட்மெண்ட் இருக்கிறது. அது எந்த அளவுக்கு வேலை செய்கிறது என்று பார்த்தால், அது போதுமான அளவுக்குச் செய்யவில்லை என்று சொல்ல விரும்புகிறேன். எல்லா டிபார்ட்மெண்டுகளிலும் லஞ்ச ஊழல்கள் அதிகமாக இருக்கின்றன. விண்ணப்பங்கள் வந்தால்தான் கமிஷன் விசாரித்து நடவடிக்கை எடுக்கிறதே தவிர, அதுவாகப் போய் லஞ்ச ஊழல் இருக்கிறதா என்று கவனிப்பதில்லை. அந்த இலாகாவில் இன்னும் அதிகப்படியாக நியமித்து எந்தெந்த இடத்தில் லஞ்சம் இருக்கிறதோ அதைக் கண்டு பிடித்து தகுந்த நடவடிக்கை எடுக்கவேண்டும்.

இன்னும் அடுத்தபடியாக நிர்வாகத்தில் செலவைக் குறைப்பதற்கான நடவடிக்கைகள் எடுக்கவேண்டும். 1,500 ரூபாய்க்கு பதில் 1,000 ரூபாய் போதுமென்று மந்திரிகள் தங்கள் சம்பளத்தைக் குறைத்து வாங்கிக் கொண்டால், மற்றவர்களும் குறைத்து வாங்கிக் கொள்ள சௌகரியமாக இருக்கும்.

அடுத்தபடியாக ஜில்லாக்களில் எடுத்துக்கொண்டால் பி.டபிள்யூ. டி-க்கு ஒரு வொர்க்ஷாப், அக்ரிகல்சுரல் ரிஸர்ச் என்ஜினீயருக்கு ஒரு வொர்க்ஷாப் என்று பல வொர்க்ஷாப்புகள் வைத்துக் கொண்டிருப்பதால் அனுவசியமான செலவுகள் ஏற்படுகின்றன. எல்லாவற்றையும் ஒன்றாக இணைத்து அந்த வொர்க்ஷாப்பில் எல்லா வேலைகளையும் செய்துகொள்ள நடவடிக்கை எடுத்தால் சௌகரியமாக இருக்கும். அதே மாதிரியாக என்ஜினீயர்கள்—மெகானிக் என்ஜினீயர்கள், ஸிவில் என்ஜினியர்கள் என்று பல டிபார்ட்மெண்டுகளில் இருப்பதை ஒன்றாக இணைத்து ஒரே டிபார்ட்மெண்டாக இயங்கினால் செலவு குறையக்கூடிய நிலைமை ஏற்படும்.

அடுத்து இன்றைய தினம் நிர்வாகத்தில் முக்கிய பங்கு வகிக்கக்கூடிய சர்க்கார் குமாஸ்தாக்களின் நிலையை உயர்த்த வேண்டும். 1946-ம் வருஷத்தில் செண்ட்ரல் பே கமிஷன் ரிப்போர்ட்டில் சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் அவர்களுக்குக் கொடுக்கக்கூடிய பஞ்சப்படி மத்திய சர்க்கார் ஊழியர்களுக்கும், மாகாண சர்க்கார் ஊழியர்களுக்கும் ஒரே மாதிரியாக இருக்கவேண்டுமென்று இருக்கிறது. மத்திய சர்க்கார் அதற்கான நடவடிக்கைகளை எடுத்து, மாகாண சர்க்கார் எடுக்கத் தவறி விட்டது. எந்த அளவுக்கு மத்திய சர்க்கார் பஞ்சப்படியை கொடுத்தார்களோ, அந்த அளவு கொடுக்க மாகாண சர்க்கார் தவறி விட்டது. இன்றைய தினம் எந்த அளவுக்கு விலைவாசிகள் ஏறி இருக்கின்றன? சமீபத்திலே மாகாணம் பூராவிலும் கூட்டம் நடத்தி அவர்களுடைய குறைகளை நியாயமான முறையில் சர்க்காருக்குத் தெரிவித்திருக்கிறார்கள். நமது சர்க்கார், மத்திய சர்க்கார் ஊழியர்களுக்கு எந்த அளவுக்குப் பஞ்சப்படி கொடுக்கப்படுகிறதோ அந்த அளவுக்குக் கொடுக்க முன்வரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்து பர்ஸனல் பைல்ஸைப் பற்றி ஒன்று குறிப்பிட விரும்புகிறேன். இதைப் பற்றி டிஸ்ட்ரிக்ட் ரெவின்யூ அட்மினிஸ்ட்ரேஷன் என்க்வயரி ரிப்போர்ட்டில்கூட சொல்லியிருக்கிறார்கள், பர்ஸனல் பைல்ஸை எடுத்து விட வேண்டுமென்று. அவர்களுடைய தகுதித் தன்மையைப் பார்த்து உத்தியோக உயர்வு கொடுக்கவேண்டும். அப்படி பர்ஸனல் பைல்ஸ் இருந்தாலும் கூட—இப்போது கண்டபடி எழுதுவது போலல்லாமல்—எழுதப்பட்டதை சம்பந்தப்பட்ட உத்தியோகஸ்தர்களுக்குத் தெரியப்படுத்தி, பதில் சொல்வதற்கு ஒரு வாய்ப்புக் கொடுத்து, அவர்கள் எக்ஸ்பிளனேஷன் கொடுக்கவும் பதில் கொடுக்கவும், அப்படிப்பட்ட ஒரு முறை இருக்க வேண்டும். அத்துடன் டிஸ்ட்ரிக்ட் ரெவின்யூ என்க்வயரி கமிட்டி இன்னும் பல சிபார்சுகளைச் செய்திருக்கின்றது. உத்தியோகஸ்தர்களுக்குக் கேண்டீன் வைக்க வேண்டும். விளையாட்டு இடங்கள், தங்கும் இடங்கள் எல்லாம்

கொடுக்கவேண்டும் என்றெல்லாம் சிபாரிசுகளைச் செய்திருக்கிறார்கள். இவை களையெல்லாம் உடனடியாக அமுல் செய்வதற்கு நடவடிக்கை எடுக்க வேண்டும்.

இன்றைய தினம் தாலூகா ஆபீஸ்களை எடுத்துக் கொண்டால், ஜில்லா ஆபீஸ்களை எடுத்துக் கொண்டால், போதுமான காற்றோட்டமும், போது மான கட்டிட வசதியும் இல்லாமல் மிக மோசமாக இருக்கின்றன. இவை களையெல்லாம் சரியான முறையில் அபிவிருத்தி செய்வதற்கான நடவடிக் கைகளை சர்க்கார் எடுக்கவேண்டும். இன்னும் கிராம உத்தியோகஸ்தர் களான கர்ணம், தண்டல்காரன் போன்றவர்களின் சம்பளத்தை உயர்த்த வேண்டும். இத்துடன் என்னுடைய வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

**Sri V. S. MANIKKASUNDARAM** : கனம் சபாநாயகர் அவர்களே, அரசாங்கத்தார் கொண்டு வந்திருக்கும் இந்த மானியத்தை ஆதரிக்கிறேன். இப்படி ஆதரிக்கும்போது என்னுடைய அபிப்பிராயத்தில் தோன்றக்கூடியவைகளையும், அரசாங்கம் ஏற்றுக்கொள்ளவேண்டிய சில பொறுப்புகளைப் பற்றியும் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். அர சாங்கத்தார் தங்களுடைய பொறுப்புகளை நிறைவேற்றுகிற விஷயத்தில், பொது ஜன அபிப்பிராயம் என்ன என்பதைப் பற்றி நேரடியாகத் தெரிந்து கொள்வதற்குத் தக்க முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டியது அவர் களுடைய கடமையான பொறுப்பாகும் என்பது என்னுடைய கருத்து. அந்த முறையில் பொது ஜன அபிப்பிராயத்தைத் தெரிந்து கொள்ளும் பொருட்டு மந்திரிகள் சுற்றுப் பிரயாணம் செய்யவேண்டும். அதற்கான செலவுகளை அரசாங்கம் ஏற்றுக்கொள்ள வேண்டும். அந்த ரெக்கார்டுகளுக்கா மக்கள் வரிப்பணத்திலிருந்து செலவழிப்பது பொருத்தம் என்று தான் நான் கருதுகிறேன். எந்த முறையில் நமது அரசாங்கம் பொது ஜன அபிப் பிராயத்தைத் திரட்டுகிறார்கள்; சரியானபடி திரட்டுகிறார்களா, அல்லது அதில் ஏதேனும் குற்றம் குறை இருக்கிறதா என்பதைப் பற்றி எனக்குத் தெரிந்த வரையில் இந்தச் சபையின் முன் எடுத்து வைக்க விரும்புகிறேன்.

சமீபத்திலே மத்திய சர்க்காரில் ஒரு மந்திரியான கனம் எஸ். கே. படீல் அவர்கள் விவசாய அபிவிருத்தியைப் பொருத்த வரையில்—உணவு உற்பத்தியைப் பொருத்த வரையில் இர்ரிகேஷன் டிபார்ட்மெண்ட், அக்ரிகல்சுரல் டிபார்ட்மெண்ட் ஆகிய இவைகளுக்குள் கோ-ஆர்டினேஷன் கிடையாது—ஒற்றுமை, ஒத்துழைப்புக் கிடையாது—என்று சொன்னதை இந்தச் சபையினுடைய கவனத்திற்கு இந்த சந்தர்ப்பத்திலே கொண்டுவர விரும்புகிறேன். இது எவ்வளவு தூரம் உண்மை என்பதும், பொருத்தம் என்பதும், புதிதாக நீர்ப்பாசனத் திட்டங்கள் அமுலுக்குக் கொண்டு வரப் பட்ட பிரதேசங்களிலிருந்து வரும் என்னைப் போன்றவர்களுக்குத் தெரியும். உதாரணமாக ஒன்றை இந்தச் சபையின் முன்பு வைக்க வேண்டுமானால் எங்கள் கீழ் பவானியைப் பொருத்த மட்டில் ஈரோட்டில் டிஸம்பர் கடைசியிலும், ஜனவரி ஆரம்பத்திலும் இரண்டு கூட்டங்கள் நடைபெற்றன. முதலில் நடந்தது இர்ரிகேஷன் கான்பரன்ஸ் என்று சொல்லப்பட்டது. அதற்கு கோயம்புத்தூர் ஜில்லா கலெக்டர் தலைமை வகித்தார். அந்த கான்பரன்ஸில் அங்கு அமுலாக்கப்படும் நீர்த் தேக்கத் திட்டங்களுக்குப் பொறுப்பான அதிகாரிகளும், என்ஜினீயர்களும் பிரசன்னமாயிருந்தனர். அந்த சமயத்திலே அங்கே கலெக்டர் அவர்கள் அந்தப் பகுதியிலே கீழ் பவானித் திட்டத்தின் கீழ் 1 லட்சத்து 90 ஆயிரம் எக்கருக்கு வரி வசூல் செய்யப்பட்டிருக்கிறது; அதனால் 1 லட்சத்து 90 ஆயிரம் எக்கருக்கு மேலாக கீழ் பவானித் திட்டத்தினால் பயனடைந்திருக்கிறது என்று தெரிவித்தார்கள். அங்கு பிரசன்னமாயிருந்த மராமத்து இலாகா அதிகாரிகள் 1 லட்சத்து 90 ஆயிரம் எக்கருக்கு நாங்கள் தண்ணீர் விடுவது கிடையாது; 1 லட்சத்து 90 ஆயிரம் எக்கர்கள் பயனடைந்திருக்க முடியாது; 1 லட்சத்து 20 ஆயிரம் எக்கருக்குப் போதுமான தண்ணீர்தான் வாய்க்காலில் விட்டிருக்கிறோம் என்று தெரிவித்தார்கள். இந்த விஷயத்தை அரசாங்கத்தார் கவனத்தில் எடுத்துக் கொண்டு அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யவேண்டுமென்று பணிவோடு கேட்டுக் கொள்கிறேன். இதிலிருந்து அந்தக் கூட்டத்தில் பிரசன்னமாயிருந்த பொது ஜனப் பிரதிநிதிகளுக்கும் பொது ஜனங்

களுக்கும் அரசாங்கத்தின் கொள்கையைப் பற்றியும், நல்லெண்ணத்தைப் பற்றியும் எந்த விதமான அபிப்பிராயம் ஏற்படும் என்பதைக் கனம் அமைச்சர் அவர்கள் தயவு செய்து மனதில் ஆராய்ந்து பார்க்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். இதிலிருந்து ஏற்படும் ஒரு கருத்து என்ன வென்றால் 70 ஆயிரம் ஏக்கருக்கு மேலாக தண்ணீர் விடப்படவில்லை ; அப்படி விடப்படாத பகுதிக்கும் சேர்த்து வரி வசூல் செய்யப்படுகிறது என்பதுதான். இதனால் அரசாங்கம் பொது ஜன அபிப்பிராயத்தைத் தெரிந்து கொள்வதற்கு முயற்சியெடுத்துக் கொண்டு அவர்கள் என்ன நினைக்கிறார்கள் என்று சிந்தித்துப் பார்க்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அதற்கு அடுத்த நாள் பிளாக் அட்வைஸரி கமிட்டி கூட்டத்தில் ஜில்லா விவசாய இலாகா அதிகாரிகள் வந்திருந்தார்கள். இதற்கும் ஜில்லா கலெக்டர்தான் தலைமை வகித்தார்கள். பொது மரா மத்து இலாகாவின் பிரதிநிதிகளும் பிரசன்னமாயிருந்தார்கள். கீழ் பவானித் திட்டத்தில் ஒரு புதுமையான முறை கையாளப்படுகிறது. அதா வது அங்கு $10\frac{1}{2}$ நாட்களுக்கு ஒரு தண்ணீர் விடப்படுகிறது. $10\frac{1}{2}$ நாளுக்கு ஒரு தண்ணீர் என்பது எந்தப் பயிருக்கும் போதாது என்பது தெரிந்த சமாசாரம். அந்தக் கூட்டத்தில் கலெக்டர் மூலமாக அங்கு பிர சன்னமாயிருந்த விவசாய இலாகா அதிகாரி $10\frac{1}{2}$ நாட்களுக்கு ஒரு தண் ணீர் விட்டால் எந்த வெள்ளாமைக்கும் போதாது, எந்தப் பயிரையும் வெற்றிகரமாக எடுக்க முடியாது என்று தெரிவித்தார்கள். அந்த நிலைமையிலே எங்களைப் போன்ற பொது ஜனப் பிரதிநிதிகளும் மற்றவர் களும் என்ன நினைப்பார்கள். அந்தப் பகுதியிலே நஞ்சை வெள்ளாமை எடுக்கும் பூமிகள் 30,000 ஏக்கர் இருக்கும் என்று சொன்னார்கள். 30,000 ஏக்கருக்குத் தண்ணீர் விட்டு போதிய பாசன வசதியளித்து விட்டு, 90,000 ஏக்கருக்கு $10\frac{1}{2}$ நாட்களுக்கு ஒரு தண்ணீர் விட்டு விட்டு, 70,000 ஏக்கருக்குத் தண்ணீரே விடாமல், மொத்தம் 1 லட்சத்து 90 ஆயிரம் ஏக்கருக்கு என்று சொன்னால் அந்தப் பக்கத்திலுள்ள ஜனங்கள் என்ன நினைப்பார்கள் என் பதை கனம் அமைச்சர் அவர்கள் யோசனை செய்யவேண்டுமென்று கேடடுக் கொள்கிறேன். இது விவசாய இலாக்காவுக்கும், ரெவின்யூ இலாகாவிற்கும் மராமத்து இலாகாவிற்கும் "கோ-ஆர்டினேஷன்" இல்லை என்பதை விளக்க ஒரு உதாரணம் ஆகும். அடுத்தபடியாக மராமத்து இலாகா வுக்கும், ரெவின்யூ இலாகாவிற்கும் "கோ-ஆர்டினேஷன்" இல்லை என் பதற்கு ஒரு உதாரணம் சொல்லுகிறேன். அங்கே "டிஸ்டிரிபியூட்டரி" கால்வாய்களுக்கு தண்ணீர் விட்டுக் கொடுப்பது யார் ; யாருடைய பொருப்பில் அது இருக்க வேண்டும்; யார் நிலம் "அக்வையர்" செய்து கொடுப்பது இவையெல்லாம் நிர்ணயிக்கப்படாமலே இருக்கிறது. மதகு வரையிலும் தண்ணீர் விடுகிற பொறுப்பை மராமத்து இலாக்காவினர் ஏற்றுக்கொண்டி ருக்கிறார்கள். 50 ஏக்கரிலிருந்து 200 ஏக்கர் வரையிலும் மதகு வைத்துக் கொடுத்திருக்கிறார்கள். மதகை விட்டு தண்ணீர் வந்தவுடனே, அதை யார் பிரித்துக் கொடுப்பது என்ற பொறுப்பை யாரும் ஏற்றுக்கொள்வது கிடையாது. நான் தலைமை இஞ்சினியர் முதல் லஸ்கர் வரையிலும் கேட்டுப் பார்த்திருக்கிறேன். அந்தப் பொறுப்பு தங்களுக்குக் கிடையாது என்று சொல்லுகிறார்கள். ரெவென்யூ இலாகாவைக் கேட்டால் "whether the
10-40 a.m. land is actually irrigated with water or not" என்று போடப்பட்டிருக் கிறது. ஆகையால் தீர்வையைப் போட்டுத்தான் தீருவோம் என்று சொல்லுகிறார்கள். நான் வழக்கறிஞன் என்ற முறையிலே இது விஷய மாக பல அப்பீல்கள் தாக்கல் செய்திருக்கிறேன். டிபார்ட்மென்ட் விதிகளையும், ஆர்டர்களையும் எடுத்துக் காண்பித்து தண்ணீர் பிரித்து கொடுக்கவேண்டிய அவசியம் இல்லை ; தண்ணீர் பாயவேண்டிய அவசிய மில்லை என்று சொல்லுகிறார்கள். தண்ணீரால் மக்கள் பயனடைந்திருக் கிறார்கள், எங்களுக்கு வரி வசூல் செய்யும் அதிகாரம் இருக்கிறது என்று சொல்லுகிற நிலைமைதான் ஏற்பட்டிருக்கிறது. அங்கேயுள்ள மக்களின் பிரதிநிதிகளின் வார்த்தையையும் அனுசரித்து நடப்பது கிடையாது. இந்த நிலையில் இங்கே மந்திரி சபையில் கேட்கிற பட்சத்தில் "ஸ்ரீ கருத்திருமன் அவர்கள் சம்மதம் கொடுத்திருக்கிறார், கருத்திருமன் அவர்கள் ஜனங்

1st April 1958] [Sri V. S. Manikkasundaram]

களுடைய பிரதிநிதி " என்று சொல்லுகிறார்களே தவிர, அந்தப் பக்கத்திலிருந்து இன்னும் 6, 7 பிரதிநிதிகள் வந்திருக்கிறார்கள, அவர்களையும் கூப்பிட்டுக் கேட்கலாம் என்று நினைப்பதில்லை. " நீங்கள்தான் சம்மதித்திருக்கிறீர்களே " என்று கேட்கிறார்கள். எனக்குத் தெரிந்த வரையில் ஸ்ரீ கருத்திருமன் அவர்களுக்கு இந்த கீழ் பவானிப் பிரதேசத்திலே ஒரு பூமியும் கிடையாது. அந்தப் பாசனத்திலே அவருக்கு அக்கரையும் கிடையாது. கீழ் பவானித் திட்டம் வெற்றி அடையக் கூடாது என்ற எண்ணம் அவருக்கு இருப்பதாக நினைக்கவேண்டியிருக்கிறது. கீழ் பவானி ஆற்றுக்குக் குறுக்கே கொடிவேரி அணையிலிருந்து வாய்க்கால் ஒன்று போக நஞ்சை பூமிக்கு தண்ணீர் சப்ளை செய்கிறது. அதை இருபோக நஞ்சையாக்க வேண்டுமென்று முயற்சி பண்ணிக் கொண்டிருக்கிறார்கள். இரண்டாம் போகத்திற்கு அனுகூலம் ஏற்படவேண்டுமென்பதற்காக, இந்தத் திட்டம் எப்படியாவது " குட்டிச் சுவராக " போகட்டும் என்று நினைக்கிறார்கள். தவறான கருத்துக்களைச் சொல்லி, இந்தத் திட்டத்தில் சிக்கல்களை உண்டாக்கியிருக்கிறார்கள். இந்த நிலையிலே அங்கேயுள்ள பொது மக்களின் அபிப்பிராயத்தைப் பற்றியும், சட்டசபை அங்கத்தினர்களுடைய அபிப்பிராயத்துக்கு அரசாங்கம் எவ்வளவு தூரம் மதிப்புக்கொடுக்கிறது என்பதைப் பற்றியும் ஜனங்கள் ஓரளவுக்குத் தெரிந்துக்கொள்ளவேண்டுமானால், நாம் இந்த விஷயத்தில் கவனம் செலுத்தி, திருத்தி அமைத்துப் பரிகாரம் செய்ய வேண்டியது மிகவும் அவசியம். கீழ்பவானித் திட்டம் நமது நாட்டிற்கு மட்டுமல்ல, உலகத்திற்கே, புஞ்சைப் பயிருக்குத் தண்ணீர் விடுகிற ஒரு பரீட்சார்த்தத் திட்டம். ஆகவே இந்தத் திட்டத்திலே புதுப் புதுக் கருத்துக்களைப் புகுத்தி " தண்ணீர் விடாமல் வரி வசூல் செய்வதற்கு அதிகாரம் இருக்கிறது ; தண்ணீர் பாய்ந்ததா இல்லையா என்று தெரிந்து கொள்ளவேண்டிய அவசியமில்லை ; மக்களுடைய பிரதிநிதிகள் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள் " என்று சொல்லுவது பொருத்தமல்ல. " பூமி வறண்டு கிடக்கிறது, அணைக்கட்டுக் கட்டி வாய்க்கால் வெட்டியிருக்கிறார்கள், தண்ணீர் வேண்டும் " என்று ஜனங்கள் கேட்கிறார்கள். " புஞ்சைக்குத் தான் தண்ணீர் விடவேண்டும், மக்களுடைய பிரதிநிதிகளை வைத்து ஏதாவது ஒரு திட்டம் வகுத்து, தக்க முறையில் தண்ணீர் பாய்வதற்கும், அநீதி இல்லாத முறையிலே வரி வசூல் செய்வதற்குத் திட்டம் வகுக்கிறோம் " என்று சொல்லிக் கொண்டு, இங்கே வந்து அவர்களுக்கு பாதகம் விளைவிக்கக் கூடிய வகையிலே அமல் நடத்தியே தீருவோம், நீங்கள் தான் சம்மதம் கொடுத்திருக்கிறீர்களே என்று சொல்லுவது பொருத்தமல்ல என்று கருதுகிறேன். இது எப்படியிருக்கிறது என்றால், " பசிக்கிறது " என்று சொல்லுகிறவனுக்கு ரொட்டி கொடுப்பதற்குப் பதிலாக, கல்லைக் கொடுத்து " நீதான் பசிக்கிறது, ஏதாவது கொடு " என்று கேட்டாயே என்று சொல்வது போல் இருக்கிறது. அங்கேயுள்ள மக்கள், இரவு ஆனாலும் சரி, பகலானாலும் சரி, கல்யாண வீட்டிற்குப் போனாலும் சரி, இழவு வீட்டிற்குப் போனாலும் சரி, எங்களிடத்தில் இதைப் பற்றித் தான் கேட்கிறார்கள். எங்களிடத்தில் அவர்கள் அபார நம்பிக்கை வைத்திருக்கிறார்கள். அவர்களுடைய அபிப்பிராயம் என்ன என்று தெரிந்து கொள்வதற்கு எங்களுக்கும் சந்தர்ப்பம் கொடுத்தால் நல்லது. அந்தப் பகுதியிலிருந்து வரக்கூடிய மக்கள் பிரதிநிதிகள் என்ன அபிப்பிராயத்தை கொண்டிருக்கிறார்கள் என்பதை அறிந்துகொள்ள அவர்களுக்கு சந்தர்ப்பம் கொடுக்கவேண்டியது இந்த அரசாங்கத்தினுடைய கடமை என்பதை பணிவன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன். கீழ் பவானி திட்டப் பிரதேசத்தில் கையாளும் முறையை இன்னும் பல திட்டங்களுக்கு விஸ்தரிக்கப் போவதாகவும், உதாரணமாக பரம்பிக்குளம் திட்டத்தில் இந்த முறையைப் புகுத்தப் போவதாகவும் கேள்விப்பட்டேன். அங்கு இருந்து வந்திருக்கும் பிரதிநிதிகளையும் இன்னும் மற்றவர்களையும் கொண்ட ஒரு கமிட்டியை ஏற்படுத்தி, அங்குள்ள பகுதிகளுக்குச் சென்று, அங்கே அமலுக்குக் கொண்டுவந்திருக்கும் திட்டத்தைப் பற்றி மக்கள் என்ன நினைக்கிறார்கள் ; வரி விதிப்பு விகிதம் எப்படி அமல் நடத்தப்படுகிறது; தண்ணீர் கொடுப்பது போதுமா, போதாதா, தண்ணீர் பிரித்துக் கொடுப்பது யார் பொறுப்பு ; நடைமுறையில் ஏதாவது சிக்கல்கள் இருக்கின்றனவா, இல்லையா, கஷ்டங்கள் இருக்கின்றனவா இல்லையா என்பதை

[Sri V. S. Manikkasundaram] [1st April 1958

யெல்லாம் தெரிந்துகொண்டு, அவைகளை நீக்குவது அரசாங்கத்தின் கடமையாகும். அதன் பின் தான் புதிய திட்டம் புதிய பிரதேசங்களுக்கு விஸ்தரிக்கப்படவேண்டும். திருவாளர் எஸ். கே. பட்டீல் சொன்னது போல, கீழ் பவானித் திட்டத்தைப் பொறுத்த வரையில் ரெவின்யூ இலாக்காவிற்கும், மராமத்து இலாக்காவிற்கும், விவசாய இலாக்காவிற்கும் "கோ-ஆர்டினேஷன்" ஏற்படுத்தவேண்டியது மிகமிக அவசியம்.

சட்டதிட்டங்களை கீழேயுள்ள அதிகாரிகள் எந்த முறையில் நிறைவேற்றுகிறார்கள் என்பதை நாம் பொதுமக்களிடமிருந்து தெரிந்து கொள்ள வேண்டும். இந்த சமயத்தில் இந்த சபையில் ஸ்ரீ எம். டி. ராமசாமி அவர்கள் தலைமை தாங்கி அமர்ந்திருப்பதைக் குறித்து மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். எப்படி அந்த பகுதியிலுள்ள மக்கள் இதைப் பற்றி நினைக்கிறார்கள் என்று அவர்களுக்கு நேரில் தெரியும். அங்கேயுள்ள மக்கள் அரசாங்கத்தின் கொள்கையைப் பற்றி என்ன நினைக்கிறார்கள் என்று தெரிந்து கொள்வதற்கு எனக்கு சந்தர்ப்பம் அதிகம் உண்டு. சட்டதிட்டங்கள் அமல் நடத்துவதைப் பற்றியும், இதனால் பலன் அடையக் கூடிய மக்கள் நல்ல அபிப்பிராயம் வைத்திருக்கிறார்களா, இல்லையா என்பதைப் பற்றியும் தெரிந்து கொள்வதற்கு என்னைப் போல் ஒருவனிடம் கேட்டால் எவ்வளவு தூரம் பலன் அளிக்கும் என்பதை தாங்கள் விளக்கக் கூடுமென்று நினைக்கிறேன். நான் ஒரு வழக்கறிஞன் ஆக இருப்பதால், "**Irrigation Cess Act**-ஐப்" பற்றியும், மற்ற சட்ட திட்டங்களைப் பற்றியும் ஜனங்கள் என்ன அபிப்பிராயம் கொண்டிருக்கிறார்கள் என்று தெரியும். கீழ்த்தர அதிகாரிகள் இந்த முறையை அவர்கள் லஞ்சம் வாங்குவதற்குத் தான் பயன்படுத்திக் கொள்கிறார்கள் என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். ஆகவே, இதையெல்லாம் கவனித்து ஆவன செய்யவேண்டு மென்று பணிவன்புடன் கேட்டுக் கொண்டு, என்னுடைய பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

**Sri P. G. KARUTHIRUMAN** : கனம் தலைவர் அவர்களே, எனக்கு முன்னால் பேசிய கனம் அங்கத்தினர் என்னுடைய நெருங்கிய நண்பர். என் மேலுள்ள ஆசைப் பெருக்கினால் என்னைப்பற்றி அதிகம் சொன்னதைக் குறித்து சந்தோஷப்படுகிறேன். இதிலே எந்த விஷயத்தைக் குறிப்பிட விரும்புகிறேன் என்றால், கீழ் பவானித் திட்டம் சம்பந்தமாக, கருத்திருமன் சொன்னதை சர்க்கார் கொள்கையாக ஏற்றுக் கொண்டிருப்பதாகவும், அதனால் அங்கேயுள்ள ஜனங்களுக்கு அதிகக் கஷ்டம் வந்து விட்டதாகவும் ஒரு கருத்தை இந்த சபையில் அவர் பரப்பி விட்டார் என்று நினைக்கிறேன். ஒன்று மட்டும் நான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். கீழ் பவானியில் எனக்கு 1 ஏகர் கூட இல்லை என்று குற்றம் சாட்டினார்கள். அதே ரீதியில் ரெவினியூ அமைச்சர் அவர்களுக்கு கூட நிலம் இல்லை என்று சொல்லிக்கொண்டு போனால் அது நன்றாக இருக்காது கீழ் பவானி பிரதேசத்தில் உள்ள எல்லா குடிமக்களையும், விவசாயிகளையும் கலந்து ஆலோசித்து, சந்தித்து பேசி ஒரு மகா நாடு கூட்டி அதற்குப் பிறகு தான் ஒரு முடிவு செய்யப்பட்டது. இதற்கு ஸ்ரீ கே. ஜி. பழனிசாமி கௌண்டர் வந்திருந்தார். சேனபதி கௌண்டரும் வந்திருந்தார். இந்த கீழ் பவானி திட்டத்தின் கீழ், அந்த வாய்க்காலில் 2,000 'கியூசெக்ஸ்' தண்ணீர்தான் விட முடியும். இதை வைத்துக் கொண்டு இரண்டு லட்சம் ஏகர் நிலங்களுக்கு எப்படி விநியோகிப்பது என்று ஆராய்ந்து பார்க்க வேண்டும்.

**Sri V. S. MANIKKASUNDARAM** : On a point of order, Sir. I believe we are on the Demands for Grants regarding Ministers, Headquarters staff, etc.

**The Hon. Sri C. SUBRAMANIAM** : I wish you had realised it, when you spoke.

1st April 1958]

SRI V. S. MANIKKASUNDARAM : The policy relating to Lower Bhavani project, I said, should be settled after the Ministry obtains the opinion of the public. I ask whether this is not relevant to the Demand or otherwise.

SRI M. D. RAMASAMI (Temporary Chairman) : Mr. Karuthiruman has been allowed to speak because he has to be given an opportunity to reply to what the hon. Member said against him.

SRI P. G. KARUTHIRUMAN : I thank you, Mr. Chairman, ஒன்று மட்டும் நான் சொல்ல விரும்புகிறேன். என்னுடைய தலை விதியோ அல்லது அதிர்ஷ்டமோ எனக்குத் தெரியாது. கனம் அங்கத்தினர் அவர்களுக்கு தெரிந்திருக்கும் விவசாயத்தைக் காட்டிலும் எனக்கு அதிகமாக விவசாயத்தில் அனுபவம் இருக்கிறது என்பதை நிச்சயமாக சொல்ல முடியும். இந்த விஷயத்தில் விவசாயிகளை கலந்து, ஒரு மகா நாடு கூட்டி முடிவு செய்திருக்கிறோம். இப்பொழுது பி. டபிள்யூ. டி. மந்திரியாக இருக்கும் ஸ்ரீ கக்கன்ஜி அவர்களுடன் எல்லா கிராமங்களுக்கும் போயிருக்கிறோம். தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டி காரியதரிசி ஸ்ரீ பி. எஸ். ரங்கசாமி நாயுடு அவர்களுடனும் பல கிராமங்களுக்கு சென்றிருக்கிறோம். விவசாயிகளை அப்பொழுது கேட்டபொழுது 10 நாட்கள் கழித்து தண்ணீர் வினியோகத்தாலும் பரவாயில்லை என்று சொன்னார்கள்.

(Mr. Speaker in the Chair.)

இதைப்பற்றி சொல்லும்போது எனக்கு ஒருவிஷயம் ஞாபகத்துக்கு வருகிறது. ஒரு தகப்பன் மரணத் தருவாயிலிருக்கும்போது தன் மகனைக் கூப்பிட்டு சில விஷயங்களைச் சொல்லிக் கொண்டிருந்தான். தனக்கு ஒருவர் 2,000 ரூபாய் கைமாற்றாக கொடுக்க வேண்டும் என்று சொன்னதை மகன் குறித்துக்கொண்டான். இன்னொருவர் 2,000 ரூபாய் கொடுக்க வேண்டும் என்று சொன்னபோது அதையும் மகன் குறித்துக்கொண்டான். மூன்றாமவர் தனக்கு 1,000 ரூபாய் கொடுக்க வேண்டும் என்று சொன்னதையும் அவன் குறித்துக்கொண்டான். ஆனால் தகப்பன் "தான் ஒருவனுக்கு 500 ரூபாய் கடன் திருப்பிக் கொடுக்க வேண்டும்" என்று சொன்ன போது மரணத்தருவாயில் இருக்கும் தகப்பனுக்கு புத்தி கெட்டுப் போச்சு என்று சொன்னானம்.

கீழ் பவானி திட்டத்தின் மூலம் எந்தெந்த சௌகரியங்கள் உண்டோ அவைகளை மட்டும் ஏற்றுக்கொண்டு, கடமை என்று சொல்லும்போது, "சர்க்காருக்கு புத்தி கெட்டுப் போச்சு, அமைச்சர்களுக்கு புத்தி கெட்டு போச்சு, சர்க்கார் கொள்கை தவறு" என்று சொல்வது நல்லது அல்ல. கீழ் பவானி பிரதேசத்தில் இருக்கும் பொது மக்களையும்; விவசாயிகளையும் கலந்து ஆலோசித்த பிறகு தான் சர்க்கார் இந்த விஷயத்தில் நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறார்கள் என்று எடுத்துச் சொல்ல விரும்புகிறேன்.

கொடிவேரி அணையிலிருந்து கிடைக்கும் தண்ணீரைக் கொண்டு 1947-ம் வருஷத்திலிருந்தே இரு போகம் சாகுபடி செய்யப்படுகிறது. எனக்கு அதிக நிலங்கள் கிடையாது. எனக்கு 20 அல்லது 25 எகர் நிலம் தான் இருக்கிறது. உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கு நாம் இவைகளை செய்து கொண்டிருக்கிறோம். அப்படி இருக்கும்போது நண்பர் சொல்வது சரியல்ல.

MR. SPEAKER : Is the hon. Member making a speech or personal explanation?

SRI M. JAGANNATHAN : Is it in order for the hon. Member who has just now spoken to go on making a long speech in the name of personal explanation and narrating a grandmother story, thereby wasting the time of the House?

Mr. SPEAKER : It is perfectly in order. The length of the personal explanation depends upon the Chair allowing it. The Chairman allowed it as relevant.

Sri P. S. CHINNADURAI : மதிப்புக்குரிய சபாநாயகர் அவர்களே, இந்த சபையின் முன்பாக பிரேரேபிக்கப்பட்டிருக்கும் மான்யத்திற்கு எதிராக பிரேரேபணை செய்யப்பட்டிருக்கும் வெட்டுப் பிரேரணையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். நம்முடைய நாட்டில் கவர்னர் பதவி, கவர்னர் ஜெனரல் பதவிகள் ஒரு காலத்தில் மிகவும் கேவலமானதாக கருதப்பட்டு வந்தது. சாதாரணமாக மக்களுக்கு இந்த கவர்னர், கவர்னர் ஜெனரல் பதவிகளுக்கும் அந்தக் காலத்தில் சம்பந்தம் இராத ஒரு நிலைமை இருந்தது. அப்படிப்பட்ட முறையில் அவர்கள் கருதப்பட்டார்கள். ஜன நாயக ஆட்சி நடைமுறையில் வரும் போது இவைகள் ஒழிக்கப்படும் என்று உறுதியாக நம்பியவர்களுள் நானும் ஒருவன். ஆனால் நமக்கு என்று நாம் ஒரு சொந்த அரசியல் அமைப்பை நிர்ணயிக்கும் வாய்ப்பு கிடைத்தபோதுகூட இந்த பதவிகளை ஒழிப்பதற்குப் பதில் முன்பு இருந்த அந்தஸ்து கொடுத்து நீடித்துக் கொண்டிருப்பது மிகவும் வருந்துவதற்குரிய விஷயம் என்று நான் நினைக்கிறேன். கவர்னர் பதவி சர்க்கார் தலைமைப் பதவி போல மிகவும் உன்னதமான பதவியைப் போல கருதப்படுகிறது. அப்படி கருத வேண்டும் என்று சொல்லப்படுகிறது. கவர்னரைப்பற்றி ஏதாவது விமரிசனம் செய்தால்கூட அப்படி செய்யக்கூடாது என்று சொல்லும் அளவுக்கு அந்தப் பதவி கருதப்படுகிறது.

ஆனால் கவர்னர் பதவியானது மிகவும் கேலிக்குரியதாகத்தான் இருக்கிறது என்பதை நான் சொல்ல விரும்புகிறேன். எந்த கவர்னரைப் பற்றியும் தனிப்பட்ட முறையில் பேச நான் விரும்பவில்லை. கவர்னர் பதவி என்பது கேவலமான நிலைமையிலிருந்து இப்பொழுது கேலிக்குரிய தான நிலைமைக்கு வந்திருக்கிறது. தேர்தலிலே வெற்றி பெறாமல் தோற்றவர்கள் உடல் நலம் கெட்டு இருப்பவர்கள், அரசியலில் முன்னுக்கு வரமுடியாமல் இருப்பவர்கள் இப்பேர்ப்பட்டவர்களுக்கு அது ஒரு அரசியல் புகலிடமாக அமைந்து இருப்பது மிகவும் வருந்தத்தக்க, பரிதாபத்துக்குரிய விஷயமாகும் என்று இந்த நாளில் குறிப்பிட விரும்புகிறேன். இப்படிப்பட்ட பதவிக்கு அதிகப்படியான பணத்தை செலவு செய்ய வேண்டும் என்று ஒவ்வொரு ஆண்டும் இந்த சபை எப்படியோ அனுமதித்துக் கொண்டு வருகிறது. இந்த நிலைமையை தவிர்ப்பதற்கு ஒரு மார்க்கம் கண்டு பிடிக்கவேண்டுமென்று குறிப்பிட விரும்புகிறேன். கவர்னர் பதவிக்கு செலவிடும் பணத்தை வேறு ஏதாவது உபயோகரமான வழியில் செலவிட்டால் உண்மையிலேயே மக்களுக்கு மிகவும் பயன் உள்ளதாக இருக்கும் என்பது என்னுடைய அபிப்பிராயம். இதை அரசாங்கம் கவனிக்க வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

மந்திரிகள் சம்பளத்தைக் குறித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். மந்திரிகள் சம்பளம் அதிகமாக இருக்கிறது என்று சொன்னால், விலைவாசிகள் எல்லாம் ஏகமாக ஏறிவிட்டிருக்கிறது என்று அவர்கள் சொல்கிறார்கள். என்றைக்கொ கராச்சி காங்கிரஸ் மந்திரிகளுக்கு 500 ரூபாய் தான் சம்பளம் இருக்க வேண்டும் என்று சொன்னால் அதற்காக இப்பொழுது விலைவாசிகள் எல்லாம் ஏறியிருக்கும்பொழுது முன்பு சொன்னதுபோல் 500 ரூபாயை வைத்துக்கொண்டிருக்கவேண்டுமா என்று கேட்கிறார்கள். அதை அப்படியே செய்ய வேண்டும் என்கிற அவசியமும் இல்லை என்று சொல்கிறார்கள்.

11 a.m. விலைவாசி ஏற்றம் என்பது கனம் மந்திரிகளுக்கு மாத்திரம் அல்ல. அப்படித்தான் இப்போதுள்ள மந்திரி சபை கருதுகிறதா என்று கேட்கிறேன். விலைவாசி ஏற்றம் என்பது மந்திரிகளுக்கு மட்டும் அல்ல, மற்ற எல்லோருக்கும் தான் இந்த விலைவாசி ஏற்றம். அரசாங்க ஊழியர்களுக்கும் தான் இந்த விலைவாசி ஏற்றம். அவர்களுக்கு மட்டும் இந்த விலைவாசி ஏற்றம் இல்லாமல் போய் விட்டதா ? அவர்களுக்கு ஏதாவது பண்டங்களையும், உணவு பொருள்களையும் வாங்கிக்கொடுக்க இந்த அரசாங்கம்

1st April 1958] [Sri P. S. Chinnadurai]

ஏதாவது ஏற்பாடு செய்திருக்கிறார்களா ? விலைவாசியின் ஏற்றத்தால் எந்த விதத்திலும் அவர்கள் பாதிக்கப்படாமல் ஏதாவது வசதி செய்து கொடுத்திருக்கிறார்களா ? அரசாங்க சிப்பந்திகளுக்கு ஏதாவது உணவு தானியங்களையும், வேறு உபயோகப்பொருள்களையும் அவர்களுக்கு வாங்கிக்கொடுத்து அவர்கள் எந்த வகையிலும் பாதிக்கப்படாமல் இருக்க நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறார்களா என்பதை அறிய விரும்புகிறேன். அவர்கள் தங்களுக்கு அதிகப்படியான சம்பள உயர்வு வேண்டுமென்று கேட்கிற போது இப்படிப்பட்ட வசதிகளைச் செய்து கொடுத்தால் அவர்களுக்கு ஏற்பட்டிருக்கக்கூடிய குறைகளை தவிர்க்க முடியும் அல்லவா ? யுத்த காலத்தில் ரயில்வேயில் வேலை பார்க்கக்கூடிய சிப்பந்திகளுக்கு இப்படிப்பட்ட சலுகைகளைச் செய்து கொடுத்திருந்தார்கள். அதே மாதிரி ஏன் இந்த அரசாங்கமும் செய்துகொடுக்க முன் வரவில்லை ? 1939-ம் வருஷத்திய விலைவாசி அடிப்படையில் அவர்களுக்கு பண்டங்களை சப்ளை செய்ய இந்த அரசாங்கம் ஏற்பாடு செய்திருக்குமேயானால் பஞ்சப்படி சம்பந்தமாக இப்படிப்பட்ட விவகாரங்கள் வெகுவாகக் குறைந்திருக்கும் என்றே நினைக்கிறேன். ரயில்வேயில் கொடுத்த அளவு கொடுக்காவிட்டாலும் அதற்குப் பிறகு விலைவாசிகளை நிர்ணயம் செய்து அந்த அடிப்படையில் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். 1939-ல் இருந்த விலைவாசியின் அடிப்படையில் புள்ளி விவரங்களை அனுசரித்து, அதற்கு தக்கபடி இப்பொழுதுள்ள விலைவாசிகளை அனுசரித்து அவர்களுக்கு வசதி செய்து கொடுக்க ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். அந்த அடிப்படையில் அவர்களுக்கு உணவு பொருள்களையும், உபயோகப்பொருள்களையும் இந்த அரசாங்கம் சப்ளை செய்வார்கள் என்று எனக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. அப்படி நம்பிக்கை ஏற்படும்படியாக கனம் மந்திரி அவர்கள் பதில் சொல்லும் போது சொல்லுவார்கள் என்று நம்புகிறேன். பொதுவாகப் பார்க்கும்போது சர்க்கார் ஊழியர்கள் பேரில் அனாவசியமாக குற்றம் சாட்டப்படுகிறது. அவர்கள் அரசியலில் கலந்து கொள்ளுகிறார்கள் என்றும், அரசியல் வாதிகளுடன் தொடர்பு கொள்ளுகிறார்கள் என்றும் அவர்கள் பேரில் குற்றம் சாட்டப்படுகிறது. அது அனாவசியமான குற்றச்சாட்டு என்று தான் நான் சொல்ல வேண்டும். அப்படி அவர்கள் மீது குற்றம் சாட்டுவதானது அவர்களை உதாசீனப்படுத்துவதாகத்தான் ஆகிறது. இப்படிச் சொல்வதற்கு மந்திரி சபைக்கு துணிச்சல் ஏற்படுகிறதே தவிர அவர்கள் பேரில் குற்றம் சொல்வதில் அர்த்தமில்லை. உண்மையில் அவர்களின் கீழ் வேலை செய்யக்கூடிய சிப்பந்திகள் திருப்தியாக வேலை செய்யக் வேண்டுமென்றால் அவர்களுக்கு வசதிகள் செய்து கொடுக்க வேண்டும். அவர்களுக்குள்ள சம்பளத்தைக் கொடுத்தால் தான் அவர்கள் சரியானபடி தங்களுடைய கடமையைச் செய்ய முன் வருவார்கள். அதற்கு வேண்டிய பணம் இல்லை என்றால், அதற்கு பட்ஜெட் அனுமதிக்கவில்லையென்றால் அதைக் கிடைக்கப்பெறுவதற்கு சர்க்கார் வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும். சர்க்கார் சிப்பந்திகளுக்கு சம்பளத்தைப் பொறுத்த வரையில் ஒரு நல்ல ஆக்கப்பூர்வமான வேலையை துணிச்சலுடன் எடுக்க நடவடிக்கை எடுத்துக்கொள்வதற்கு இந்த அரசாங்கம் முன்வர வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

சமீபத்தில் சர்க்கார் ஊழியர்களுடைய குழந்தைகளுக்கு கல்விச் சலுகை அளிக்கப்பட்டிருக்கிறது. அம்மாதிரி கல்விச் சலுகைகள் அந்த அளவில் கிராம அதிகாரிகளுடைய குழந்தைகளுக்கும் உண்டா என்பதை அறிய விரும்புகிறேன். கிராம அதிகாரிகளுடைய குழந்தைகளுக்கு போதிய அளவு கல்விச் சலுகைகள் அளிக்கப்படவில்லை என்பதுதான் எனக்குத் தெரிய வருகிறது. இப்பொழுது கிராம அதிகாரிகள் எவ்வளவோ குறைவான சம்பளத்தைப் பெற்றுக்கொண்டு வருகிறார்கள். என்.ஜி.ஓ.க்களுக்குக் கொடுக்கப்பட்டது போல் அவர்களுடைய குழந்தைகளுக்கும் கல்விச்சலுகைகள் கொடுக்க வேண்டும் என்று இந்த அரசாங்கத்தை நான் கேட்டுக் கொள்ளுகிறேன்.

மேலும் கிராமப் பஞ்சாயத்து சம்பந்தமாக தேர்தலுக்கு உத்தரவு போட்டிருக்கிறார்கள். ரகசிய முறையில் இரண்டாந்தர தேர்தல் நடைபெற வேண்டுமென்று உத்தரவு போட்டிருக்கிறார்கள். தேர்தல் நடப்பதற்கு

முதல் நாள்தான் தேர்தல் அதிகாரி அபேட்சாப்பத்திரங்களேயும், சின்னங்களேயும் அளிப்பார் என்றும் சொல்லப்படுகிறது. முதல் நாள் அபேட்சாப் பத்திரத்தையும் சின்னத்தையும் கொடுத்தால் அதைப்போய் எப்படி ஜனங்களிடத்தில் சொல்வது என்பது தெரியவில்லை. 24 மணி நேர அவகாசமானது போதுமா என்று கேட்கிறேன். அபேட்சாப்பத்திரத்தைப்பற்றியும் சின்னத்தைப்பற்றியும் ஜனங்களிடத்தில் போய்ச் சொல்ல முடியுமா? இதைப்பார்த்தால் பெயருக்குத்தான் ரகஸ்ய வோட்டு முறை என்று வைத்திருப்பதாகத் தோன்றுகிறது. சரியான முறையில், பலன் அளிக்கும்படியான முறையில் ரகஸ்ய தேர்தலை நடத்த வேண்டும். எப்படிப்பட்ட முறையில் நல்ல பலன் அடையலாமோ, அந்த முறையில் பஞ்சாயத்து தேர்தலை நடத்தவேண்டும். குறைந்தது பத்து நாட்களுக்குமுன்னதாகவாவது அபேட்சா பத்திரங்களை தாக்கல் செய்வதற்கும் சின்னங்களைக் கொடுக்கவும் அவகாசம் வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். அவைகளை பரிசீலனை செய்வதற்கு குறைந்தது பத்து நாட்களாவது அவகாசம் வேண்டும். அப்படி அவகாசம் கொடுத்தால்தான் கிராமப் பஞ்சாயத்து தேர்தலை நடத்த முடியும், என்பது என்னுடைய அபிப்பிராயம். இதைப் பற்றி மந்திரி சபை பரிசீலனை செய்து, யோசித்து ஒரு உத்தரவு போட வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். முதல் நாள் சின்னங்களை அறிவிப்பார் என்ற முறையில் தேர்தல் நடைபெறுவது என்பது சரியல்ல, அப்படிப்போட்ட உத்தரவு சரியானது அல்ல என்பதை சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். இரண்டாந்தர பஞ்சாயத்துகளின் தேர்தல் ரகசியமுறையில் தேர்தல் நடத்துவதில் பயன் அடையக்கூடிய முறையில் அதற்கு அவகாசம் கொடுத்து அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யவேண்டுமென்று வேண்டிக்கொள்ளுகிறேன்.

மேலும் அநேகமாக நகரங்களைத் தவிர மற்ற தலைநகர காரியாலயங்களில், ஜில்லா தலைநகரம், தாலுகா தலைநகரம் போன்ற காரியாலயங்களில் சரியானபடி மேஜை நாற்காலிகள் கிடையாது. நல்ல நாற்காலி மேஜைகள் கிடையாது. அந்தக் குறையைப் போக்க நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டும். தாசில்தார் காரியாலயத்தில் கூட அப்படித்தான் இருக்கிறது. நாற்காலிகள் இல்லாமல் இரண்டு மூன்று செங்கல்களை அடுக்கிவைத்து அதன் மேல் ஒரு பலகையைப் போட்டு வைத்திருக்கிறார்கள். அதன் மேல் தான் உட்கார்ந்துகொள்ள வேண்டுமாம். ஜனநாயக காலத்தில் ஜனங்கள் வந்தால் அவர்கள் உட்காருவதற்கு வசதி இருக்க வேண்டும். அப்படி பலகையைப் போட்டு வைத்திருப்பதால் எங்கே ஒடிந்து கீழே விழுந்துவிடுமோ என்று பயந்துகொண்டு உட்கார முடியாமல் இருக்கிறது. இப்படி காரியாலயங்களில் வைத்துக்கொண்டிருப்பது சரியல்ல, ஆகவே எல்லா காரியாலயங்களுக்கும் நல்ல முறையில் மேஜை நாற்காலிகளேயும் பெஞ்சுகளையும் சப்ளை செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, இதற்கு அதிகப்படியான கவனம் செலுத்த வேண்டும் என்று கேட்டுக் கொண்டு இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

**Sri M. D. RAMASAMI:** கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மானியத்தின் மீது கனம் ராமசாமி பிள்ளை அவர்கள் கொண்டு வந்துள்ள வெட்டுப் பிரேரணையை ஆதரித்து சில வார்த்தைகளைச் சொல்ல ஆசைப் படுகிறேன். நிர்வாகத் துறையில் சாதாரணமாக லஞ்சம் தாண்டவம் ஆடுகிறது என்ற பேச்சு நிரந்தரமாகிக்கொண்டு வருகிறது. மக்கள் யாராகிலும் காரியாலயங்களுக்குச் சென்று தங்கள் வேலைகளை கவனித்துக் வரவேண்டுமென்று நினைத்தால் லஞ்சம் கொடுக்க தயாராக இருக்க வேண்டியதாக இருக்கிறது என்ற ஒரு எண்ணம் மக்களிடத்தில் இருக்கிறது. இப்படிப்பட்ட ஒரு உணர்ச்சி மக்களிடத்தில் சர்க்கார் சிப்பந்திகளைப்பற்றி இருக்கிறது. இதை ஒருவரும் மறுக்க முடியாது. மறுக்க முடியாத நிலையிலும் இருக்கிறார்கள். இதற்கு பல உதாரணங்களைக் கொடுக்கலாம். சமீபத்தில் சம்பவம் ஒன்று நடந்தது, அதைப்பற்றி குறிப்பிடலாம் என்று நினைக்கிறேன். சமீபத்தில் பி.டபிள்யூ.டி. டிபார்ட்மெண்டில் ஒரு எஸ்டிமேட் அப்ரூவ் ஆக வேண்டும் என்பதற்காக ஒரு மனு போடப்பட்டது. மூன்று நான்கு மாதங்களாகியும் அது பைசலாகவில்லை. அதன் பிறகு

1st April 1958] [Sri M. D. Ramasami]

என்னுடைய நண்பர் ஒருவர் அங்கே போய் எக்சிக்யூடிவ் இஞ்சினியரைப் பார்த்து இதைப்பற்றி கேட்டார். அதற்கு அவர் "போலீஸ் டிபார்ட்மெண்ட் சம்பந்தமாக பல வேலைகள் செய்வதாக இருக்கிறது, காரியஸ்தர்கள் அதில் ஈடுபட்டிருக்கிறார்கள். இன்னும் இரண்டொரு நாட்களில் அதைப் பற்றி கவனித்து பைசல் செய்யப்படும்" என்று சொல்லிவிட்டார். அதன் பிறகு இவர் திரும்பி வந்து பத்து அல்லது பதினைந்து நாட்களாகியும் அதைப்பற்றிய விவரம் ஒன்றுமே தெரியவில்லை. பின்னும் வேறு ஒருவர் மூலம் அதைப்பற்றி போய் பார்த்ததில் என்ன தெரியவந்தது என்றால், அந்தக் குமாஸ்தாவுக்கு ஏதாவது பணம் கொடுத்தால் ஒழிய அது சீக்கிரத் தில் பைசல் செய்யப்படமாட்டாது, சீக்கிரத்தில் அந்த பேப்பர் வெளியில் வராது என்று அவர் அறிந்து கொண்டு சொன்னார். அதன் பிறகு ஒரு நபர் அதற்குப் பணம் கொடுத்து பிறகு அந்தப் பேப்பர் வெளி வந்தது. இது கண்கூடாகப் பார்த்த காரியம். இன்னும் அவர் என்ன சொல்லுகிறார் என்றால் "என்ன ஐயா. இது தெரியாதா. இது எல்லோருக் கும் தெரிந்த விஷயம்தானே, ஏதாவது கவனித்தால் தான் பேபர் கள் வெளியே வரும்" என்றும் சொன்னார். இப்படிப்பட்ட நிலைமையில் இன்று நிர்வாகம் நடைபெற்று வருகிறது. இப்படி நிர்வாகத்தில் பல ஊழல்கள் இருக்கின்றன. இதை சர்க்கார் கவனிக்க வேண்டியது அவசிய மாக இருக்கிறது. இன்றைக்கு இப்படிப்பட்ட ஊழல் மலிந்து கிடக்கிறது என்பதை இந்த அரசாங்கம் கொஞ்சம் கவனிக்க வேண்டும். பொதுவாக இந்த ஊழல் சுதந்திரம் அடைந்த பிறகுதான் அதிகமாக இருக்கிறது என்ற பேச்சு இருக்கிறது என்பதை கேட்க உண்மையிலேயே வருத்தமாக இருக்கிறது. இந்த அளவில் சர்க்கார் சிப்பந்திகள் எதிர் பார்க்கிறார்கள் என்ற பேச்சு வருவதால், இது நமது சர்க்காருக்கு கௌரவத்தை உண்டு பண்ணக்கூடியதாக இல்லை என்பதை நான் வருத்தத்துடன் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக பிற்பட்ட மாணவர்களுக்கும், அரிஜன மாணவர்களுக் கும் ஸ்காலர்ஷிப் கொடுக்கும் சம்பந்தமாக ஒரு முறையை சர்க்கார் கையாண்டு வருகிறார்கள். மத்திய சர்க்காரிலிருந்தும் மாணவர்களுக்கு ஸ்காலர்ஷிப்புக்கள் வழங்கப்படுகிறது. மாகாண சர்க்கார் அவர்களும் அவர் களுக்கு ஸ்காலர்ஷிப்பு கொடுத்துக்கொண்டு வருகிறார்கள். இதனால் டூப்ளி கேஷன் அப் வொர்க்குதான் ஏற்படுகிறது. மாகாண சர்க்கார் கொடுத் தாலும் அதை மத்திய சர்க்கார் பார்த்து பரிசீலனை செய்து தான் கொடுக்க வேண்டியதாக இருக்கிறது. அந்த அளவில் ஒரு வேலையைச் செய்வதற்கு இரண்டு அதிகாரிகளை நியமித்திருக்கிறார்கள். மாகாண சர்க்கார் சொல்லிய பிறகு அதை மத்திய சர்க்காருக்கு அனுப்புவதால், மத்திய சர்க்கார் சொல்லுவதற்கு மாகாண சர்க்கார் மறுத்துச்சொல்லப்போவதில்லை. ஆகவே ஒரே வேலையைச் செய்வதற்கு இரண்டு உத்தியோகஸ்தர்களை நியமித்திருக் கிறார்கள். ஒரு மனுவை பரிசீலனை செய்வதற்கு இருவர் அவசியமில்லை. அதன்மூலம் அதிகப்படியான லாபமும் ஒன்றும் இல்லை. ஆகவே இதைப் பரிசீலனை செய்து ஒருவரை மட்டும் வைத்துக்கொண்டால் போதும் என்று தோன்றுகிறது. அதுவுமன்றி மத்திய சர்க்காரிலே தனியாக சிப்பந்திகள் வைத்து அதற்காக ஏராளமான பொருள் செலவு செய்கிறார்கள். இந்த மாகாணத்திலிருந்து வரும் மனுக்களை பரிசீலனை செய்யும்பொழுது அதற் கென்று தனியாக வேறு தகவல்களை வைத்து அவர்கள் பரிசீலனை செய்யப் போவதில்லை. அவர்கள் மாகாண அதிகாரிகள் கொடுக்கும் தகவல்களின் பேரிலேதான் இந்த மனுக்களை பரிசீலனை செய்து சாங்ஷன் செய்கிறார்கள். இரண்டு இடத்திலே ஒரே மாணவனுடைய மனுவை பரிசீலனை செய்வதை நிறுத்தி, மத்திய சர்க்கார் இந்த மாகாணத்தைப் பொறுத்த வரையில் அந்தப் பணத்தை மாகாண சர்க்காரிடமே கொடுத்துவிட்டால், வேண்டு மானால் இங்கு இருக்கும் சிப்பந்திகளை கொஞ்சம் அதிகப்படுத்திக்கொண்டு, இந்த மாகாண அதிகாரிகளே மாகாண ரீதியிலே இந்த ஸ்காலர்ஷிப்பை கொடுப்பதற்கு ஏற்பாடுசெய்தால் தொந்தரவு குறைவாக இருக்கும், சர்க் கார் சிப்பந்திகளுக்காக செய்யும் செலவும் குறையும் என்பதை எடுத்துக் காட்ட விரும்புகிறேன். மத்திய சர்க்கார் கொடுக்கக்கூடிய ஸ்காலர்ஷிப்புகள் சம்பந்தப்பட்ட வரையில், அவர்களிடம் இருக்கும் தகவல்கள் மட்டுமல்ல,

11–10 a.m.

பார்லிமெண்டு அங்கத்தினர்கள் சொல்லக்கூடிய குறைகளையும் கவனித்து ஸ்காலர்ஷிப்புகள் வழங்குவதற்கு வசதியும் இருக்கிறது. அதே வசதி மாகாணத்திலும் இருக்குமானால், அதை பரிசீலனை செய்யக்கூடிய ஒரு வாய்ப்பு மாகாண சர்க்காரிடத்திலேயே இருக்குமானால் ஒரே இடத்திலேயே இந்த மனுக்களை பரிசீலனை செய்யலாம். அதனால் பல நன்மைகள் ஏற்படும். ஆகவே, ஸ்காலர்ஷிப் மனுக்களை மத்திய சர்க்காரிலும், மாகாண சர்க்காரிலும் ஆகிய இரண்டு இடங்களிலும் பரிசீலனை செய்வதை நிறுத்து வதற்கு சர்க்கார் முயற்சி செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். மத்திய சர்க்கார் இதற்காக கொடுக்கக்கூடிய பணத்தை மாகாண ரீதியிலே கொடுக்கும்படி மாகாண சர்க்காருக்கே அளித்துவிட்டால், மாகாண சர்க்கார் கல்வியின் தராதரத்தை அனுசரித்து, நிலைமையை அனுசரித்து ஒரே இடத்திலேயே இந்த மனுக்களை பரிசீலனை செய்து ஸ்காலர்ஷிப்புகள் வழங்குவதற்கு சௌகரியமாக இருக்கும் என்பதை இந்த சமயத்தில் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

கல்வி இலாகா நிர்வாகத்தைப் பற்றி ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். ஒரு கிராமத்தில் ஒரு எலிமெண்டரி பாடசாலை ஏற்படுத்த வேண்டுமென்றால் கூட, முன்னால் ஸ்தலத்திலுள்ள கல்வி அதிகாரி அந்தக் கிராமத்திற்கு பள்ளிக்கூடம் தேவையா இல்லையா என்பதை யோசித்து ஜில்லா கல்வி அதிகாரிக்கோ அல்லது '**Divisional Inspector of Schools**' சிபார்சு செய்வார். பிறகு அந்த லெவலில் உத்தரவு பிறப்பிப்பதற்கு வசதியாக இருந்தது. ஆனால் இப்பொழுது கிராமங்களில் கூட சமுதாய பிணக்குகள், அரசியல் பிணக்குகள் எல்லாம் கல்வி ஸ்தாபனங்கள் சம்பந்தப்பட்ட வரையில் கூட நுழைந்துவிட்டன. இதன் காரணமாக கல்வி அதிகாரிகள் முடிவான அதிகாரம் செலுத்த முடியவில்லை. எல்லாவற்றிற்கும் மந்திரி சபையை எதிர்ப்பார்க்கும் அள விலே நிலைமை இருக்கிறது. இதன் காரணமாக, ஒரு கிராமத்தில் உண்மை மையிலேயே பள்ளிக்கூடம் வேண்டுமென்ற கோரிக்கை இருந்தால் கூட எத்தனையோ விதமான சக்திகளுக்கு மத்தியிலே யாருக்கு செல்வாக்கு அதிகமாக இருக்கிறதோ அவர்கள் கேட்டால் உண்டு, மற்றவர்களுக்கு இல்லை என்ற முறையில் அங்கே பள்ளிக்கூடம் ஏற்படவேண்டிய நிலைமை நிலவி வருகிறது என்பதை வருத்தத்தோடு சொல்லிக்கொள்ள ஆசைப் படுகிறேன். பள்ளிக்கூடம் ஒரு கிராமத்திற்கு அவசியமா இல்லையா என்பது பற்றி பரிசீலனை செய்யக்கூடிய யோக்கியதை கல்வி அதிகாரிகளுக்குத்தான் இருக்கிறது என்ற அளவுக்கு இருந்தால்தான் நேர்மையான முறையில் பள்ளிக்கூடம் தேவையா, இல்லையா என்பது பற்றி பரிசீலனை செய்து கல்வி அதிகாரிகள் முடிவு செய்யமுடியும். அப்படியில்லாமல் எல்லா விதமான கட்சி பேதங்களும் சச்சரவுகளும் உள்ளே நுழைந்துவிட்டால், உண்மையாகவே தேவையாக இருக்கும் கிராமங்களில்கூட பள்ளிக்கூடம் நிறுவப்படாமல் போகும் நிலைமை ஏற்படுகிறது என்பதை வருத்தத்தோடு சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இந்த நிலைமையை சர்க்கார் மாற்ற வேண்டும். ஒரு இடத்தில் பள்ளிக்கூடம் அவசியமா, இல்லையா என்பது பற்றி முடிவு செய்யும் அதிகாரம் கல்வி அதிகாரிகளுக்கு மட்டும்தான் இருக்க வேண்டும். அதில் வேறு யாரும் தலையிடக்கூடாது என்ற அளவுக்கு நிலைமை சீர்திருந்தினால்தான், உண்மையிலேயே தேவையாக இருக்கும் இடங்களில் பள்ளிக்கூடங்கள் இந்த மாகாணம் முழுவதும் நிறுவமுடியும் என்பதை சொல்லிக் கொண்டு, இத்துடன் என்னுடைய பேச்சை முடித்துக் கொள்ளுகிறேன்.

***Sri S. M. ANNAMALAI**: சட்டமன்றத் தலைவர் அவர்களே, சட்ட மன்றத்தின் முன்னால் கொண்டுவரப்பட்டிருக்கிற வெட்டுப் பிரேரேபணையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். சர்க்காரின் முக்கியமான கொள்கை சோஷலிஸ கொள்கை. அதிலும் ஆவடியில் உற்பத்தியான சோஷலிஸம். அந்த சோஷலிஸம் இந்த மாநிலத்தில் எந்த வகையில் அமுல் நடத்தப்படுகிறது என்பதை இந்த சட்டமன்றத் தின் முன்னால் சொல்ல ஆசைப்படுகிறேன். நாளுக்கு நாள் நம்முடைய மாநிலத்தில் உள்ள பணக்காரர்கள், மேலும் மேலும் பணக்காரர்கள் ஆகிக்கொண்டிருக்கிறார்கள். ஏழை நாளுக்கு நாள் ஏழை ஆகிக்கொண்டு

1st April 1958] [Sri S. M. Annamalai]

போகிறுன். இந்த அளவில் சோஷலிஸமானது நமது மாநிலத்தில் அமுல் செய்யப்பட்டு வருகிறது. அதுமட்டுமல்ல. நம்முடைய மாநில சர்க்காரின் மத்திய சர்க்கார் பிடியில் இருந்துகொண்டு, மத்திய சர்க்கார் மாநில சர்க்காரை கலக்காமலேயே, இவர்களுடைய ஆலோசனையை கேட்காமலேயே போடு கின்ற உத்தரவுகள் அனைத்துக்கும் அப்படியே கட்டுப்பட்டு, அவர்கள் இடு கின்ற உத்தரவுகளை சிரமேற்கொண்டு அப்படியே நடந்துகொண்டு வருகிறுர் கள். உதாரணமாக ஒன்றிரண்டு சொல்லுவேன். உணவைப் பொறுத்த வரையில், மத்திய சர்க்கார் இனிமேல் அரிசியை அதிகமாக உபயோகப் படுத்தாமல் கோதுமையை உபயோகப்படுத்திஞல் போதும் என்று சொன் ஞர்கள். சென்னை சர்க்காரை கேட்காமலேயே அவர்கள் அங்கு இருந்து இம்மாதிரி உத்தரவு பிறப்பித்தார்கள். இங்கு இருக்கும் அமைச்சர் உட னடியாக அதை சிரமேற்கொண்டு "நாங்கள் இனிமேல் நியாய விலை கடைகளில் கூட கோதுமையை உபயோகப்படுத்தப் போகிறேம், அரிசியை உபயோகப்படுத்தவில்லை" என்று சொல்லிவிட்டார்கள். அதுபோலவே கைத் தறி நெசவாளர்களுக்கு கொடுக்கப்பட்ட ரிபேட்டை இந்த சர்க்காரை கலக் காமலேயே மத்திய சர்க்கார் குறைத்துவிட்டார்கள். இந்திய நாட்டிலேயே ஏறத்தாழ நான்கில் ஒரு பாகம் இந்த மாகாணத்தில் கைத்தறி நெசவாளர் களாக இருக்கிறுர்கள். அப்படியிருக்கும் ஒரு மாநிலத்தை ஒரு சிறிதும் கலந்து ஆலோசிக்காமல் அவர்களுக்கு கொடுத்த ரிபேட்டை குறைத்து விட்டார்கள். அன்றைக்கு ஒரு கேள்விக்கு பதில் அளித்தபொழுதுகூட அமைச்சர் அவர்கள் சொன்ஞர்கள்: "எனக்குத் தெரியாமலே குறைத்து விட்டார்கள்" என்று அமைச்சர் அவர்களே குறைப்பட்டுக்கொண்டார்கள். இந்த அளவில் மாநில சர்க்காருடைய அதிகாரமானது மத்திய சர்க்காரின் பிடியில் இருந்துகொண்டு, இது ஒரு பொம்மை ஆட்சியாக நடந்துகொண்டு வருகிறது.

அடுத்தபடியாக, அமைச்சர்கள் சுற்றுப்பிரயாணம் செய்கின்றனர். அப் படி அவர்கள் சுற்றுப்பிரயாணம் வரும்பொழுது அவர்களுடைய கட்சியைச் சேர்ந்த தலைவர்களுக்கு, மாவட்ட காங்கிரஸ் தலைவர்களுக்கு "நாங்கள் வருகிறேம், தயாராக இருங்கள்" என்று முன்கூட்டியே அறிக்கை அனுப்பி விடுகிறுர்கள். அன்றுகூட ஒரு கேள்விக்கு பதில் அளிக்கும்பொழுது நிதி அமைச்சர் அவர்கள் சொன்ஞர்கள்: "நாங்கள் காங்கிரஸ் கட்சி தலைவர்களுக்கு மட்டுமல்ல, உங்கள் கட்சியைச் சார்ந்த சட்டமன்ற உறுப் பினர்களுக்கும் சுற்றுப்பிரயாண அறிக்கையை அனுப்புகிறேம்" என்று சொன்ஞர்கள். ஏன் காங்கிரஸ் கட்சி தலைவர்களுக்கு மட்டும் அனுப்ப வேண்டும்? மாற்றுக் கட்சியைச் சேர்ந்த தலைவர்களுக்கு ஏன் அனுப்பக் கூடாது? மாற்றுக் கட்சி சட்டமன்ற உறுப்பினர்களுக்கு அறிக்கை அனுப்பு இறேமே போதாதா என்று சொல்லுகிறீர்கள். காங்கிரஸ் கட்சி சட்டமன்ற உறுப்பினர்களுக்குக்கூடத்தான் அனுப்புகிறீர்கள். ஒரு கட்சியைச் சார்ந்த தலைவர்களுக்கு மட்டும் ஏன் அனுப்பவேண்டும். ஏன் இந்த பாரபட்சம் காட்டவேண்டும்? "நாங்கள் காங்கிரஸ் கட்சி சார்பில் வருகிறேம், மாற்றுக் கட்சி சட்டமன்ற உறுப்பினர்கள் வரவேண்டாம் என்று சொல்லுங்கள். அதுதான் ஜனநாயகம், சமத்துவ முறை என்று சொல்லுங்கள்." நாங் கள் அதை ஏற்றுக்கொள்ள தயாராக இருக்கிறேம். அதைவிட்டுவிட்டு ஒரு கட்சியைச் சார்ந்த தலைவர்களுக்கு அனுப்பிவிட்டால், அந்தக் கட்சியைச் சேர்ந்தவர்கள் அமைச்சர்களுடன்கூட இருந்துவிட்டு, மறு நாள் மாவட்டத் திலுள்ள உத்தியோகஸ்தர்களிடம் சென்று "எனக்கு அமைச்சரைத் தெரி யும். மற்ற கட்சியைச் சேர்ந்த சட்ட மன்ற உறுப்பினர்கள் சொல்லுவது நியாயமாக இருந்தாலும் இல்லை என்று விட்டு விடுங்கள், நாங்கள் சொல்லுவதைத்தான் நீங்கள் ஏற்றுக்கொள்ளவேண்டும்" என்று அதி கார தோரணையுடன் சொல்லுகிறுர்கள். இதற்காகத்தான் நான் இந்தக் கேள்வியை இந்த சட்டமன்றத்தில் கேட்டேன். நிதி அமைச்சராக இருக்கக் கூடியவர் சட்டம் தெரிந்தவர், வக்கீல் தொழிலில் பயிற்சி பெற்றவர். அவர் போடுகின்ற சட்டங்களெல்லாம் உயர் நீதி மன்றத்தில் போய் உடை படுகின்றன. உண்மையிலேயே அவர் சட்டம் நல்ல முறையில் அமுலுக்கு வரவேண்டும் என்ற நல்ல எண்ணத்தோடு போடுகிறுரா, அல்லது அதை மக்கள் நல்ல முறையில் அனுபவிக்கக்கூடாது என்ற அபிப்பிராயத்தை

11-20 a.m. வைத்துக்கொண்டு சட்டம் இயற்றுகின்றரா என்ற அச்சம் ஏற்படுகிறது என்பதை இந்த இடத்தில் சொல்ல வேண்டியிருக்கிறது. இந்த ஆட்சி இந்த ஆட்சியாளர்கள் போடும் நிலச் சீர்திருத்தச் சட்டங்கள் நீதி மன்றங்களில் நின்றனவா ? இல்லையே ! இவர்கள் போடும் சட்டங்கள் அந்த மாதிரி இருக்கின்றன. மேலும், கனம் மந்திரிகள் சுற்றுப்பிர யாணம் செய்யும்போது ஆங்காங்கே தரப்படும் மனுக்கள் சரிவரப் பரி சீலிக்கப்படுகின்றனவா ? இல்லையே ! மந்திரிகள் அவர்களிடம் கொடுக்கப்படும் மனுக்களை வாங்கி அப்படியே மாவட்ட அதிகாரிகளிடம் கொடுத்துவிட்டு பேசாமல் திரும்பி வந்துவிடுகிறார்கள். கொடுக்கப்பட்ட மனுக்களில் ஒன்றிற்குக்கூட பதில் வருவதில்லை. மக்கள் நன்மையடைய வேண்டுமென்ற நல்லெண்ணத்துடன் கனம் அமைச்சர்கள் சுற்றுப்பிர யாணம் செய்திருந்தால், மக்கள் அவர்களிடம் கொடுக்கும் மனுக்களை அவர்கள் சரிவரப் பரிசீலனை செய்து அனுகூலமான பதிலையோ பிரதி கூலமான பதிலையோ அவர்களுக்கு அனுப்பியிருக்கவேண்டும். ஒரு மனு கூடப் பரிசீலிக்கப்படுவதில்லை. அமைச்சர்கள் சுற்றுப்பிரயாணம் செய்யும்போது ஆங்காங்கே சில கட்டிடங்களைத் திறக்கிறார்கள். ஆங்காங்கே சென்றவர்கள் எப்படி சும்மாத் திரும்ப முடியும் ? ஆகவே சிலர் அவர்களை ஏதாவது கட்டிடங்களைத் திறக்கச் சொல்கிறார்கள் அவர்கள் புதிய கட்டிடங்களைத் திறக்கிறார்கள். சில சமயங்களில் பழைய கட்டிடங் கள் மூடப்பட்டு விடுகின்றன. அவைகளை கனம் அமைச்சர்கள் திறக் கிறார்கள். அமைச்சர்கள் அங்கே வருவதற்கு கொஞ்ச நாட்களுக்கு முன் அதுவரை இயங்கி வந்த ஆஸ்பத்திரி மூடப்படும். அமைச்சர் அங்கே வரும் போது அதைத் திறந்து வைப்பார். பழைய கட்டிடம் மூடப்பட்ட பிறகு, மந்திரி வந்து அதைத் திறந்து வைப்பார் என்று விளம்பரம் செய்யப்படும். அதற்குப் பிறகு கனம் மந்திரி வந்து அதைத் திறந்து வைப்பார். (சிரிப்பு). கனம் மந்திரிகளைக் கூப்பிட்டு கட்டிடங்களைத் திறக்கச் சொல்லும் பண்பை அவர்கள் இவ்வாறு வளர்க்கிறார்கள். கனம் மந்திரிகள் இந்த மாதிரி சுற்றுப்பிரயாணம் செய்கிறார்கள்.

அடுத்தப்படியாக, நம் மாநில **N.G.O's.** அவர்களுடைய பலவித மான குறைகளை, ஆங்காங்கு கூட்டங்கள் போட்டு தெரியப்படுத்திக் கொண் டிருக்கிறார்கள். நமது நிதி அமைச்சர் அவர்கள் கொடுத்துள்ள புள்ளி விவரங்களிலிருந்தே, மத்திய சர்க்காரில் வேலை பார்க்கும் ஒரு பியூன் எவ்வளவு சம்பளம் வாங்குகிறனோ அவ்வளவு சம்பளம்கூட இந்த மாநில சர்க்காரில் வேலை பார்க்கும் ஹெட் கான்ஸ்டபிலோ, **Lower Division Clerk**-ஓ வாங்கவில்லை என்பது தெரிகிறது. கனம் நிதி அமைச்சரிடம் நான் ஒன்று கேட்க விரும்புகிறேன், கோபித்துக்கொள்ளக் கூடாது என்று அவரைக் கேட்டுக்கொள்கிறேன்.

**SRI R. SWAMINATHA MERKONDAR : On a point of order, Sir,** இங்கு நடக்கும் ஆட்சி பொம்மை ஆட்சி என்று கனம் அங்கத்தினர் சொல்லியிருக்கிறார்கள். நாங்கள் பொம்மைகள் அல்ல. அவர் அவ்வாறு சொன்னது இந்த சபையின் அங்கத்தினர்களின் மதிப்பைக் குறைப்பதாக எனக்குத் தோன்றுகிறது. ஆகையால் அவர் அவ்வாறு சொன்னதை வாபஸ் வாங்குவாரா?

**MR. SPEAKER :** அவ்வாறு அவர் கூறியது, அதாவது பொம்மை என்ற வார்த்தையை உபயோகித்தது தவறு அல்ல.

**THE HON. SRI C. SUBRAMANIAM :** பொம்மையுடன் பழகுபவர் களுக்கு பொம்மையைப் பற்றித்தான் ஞாபகம் இருக்கும்.

**SRI S. M. ANNAMALAI :** நான் கனம் நிதி அமைச்சரை தாழ்மையுடன் ஒன்று கேட்க விரும்புகிறேன். அதற்காக கோபித்துக் கொள்ள வேண்டாம் என்று அவரைக் கேட்டுக்கொள்கிறேன். மத்திய சர்க்கார் ஊழியர்கள் வாங்கும் சம்பளத்திற்கும் இம்மாநில சர்க்கார் ஊழியர்கள் வாங்கும் சம்பளத்திற்கும் இவ்வளவு வித்தியாசம் இருக்கிறது. இது நியாயமா? நான் கனம் நிதி அமைச்சர் கனம் முதல்

1st April 1958] [Sri S. M. Annamalai]

அமைச்சரிடம் " நான் தங்களைவிட அதிகம் படித்தவன். ஆகையால் எனக்கு ரூ. 1,000 சம்பளம் இருக்கட்டும். உங்களுக்கு ரூ. 500 சம்பளம் போதும்." என்று சொன்னால் கனம் முதலமைச்சர் அதற்கு ஒத்துக் கொள்வாரா ! கனம் முதலமைச்சரிடம் அவ்வாறு சொல்வதற்கு கனம் நிதி அமைச்சருக்கு தைரியமாவது வருமா?

**Mr. SPEAKER :** இந்த உதாரணம் நன்ருக இல்லையே ! அவ்வாறு செய்வது, ஒரு அமைச்சர் இன்னொரு அமைச்சரைக் குறைவு படுத்துவதாகத் தான் இருக்கும். ஆகவே இப்படிப் பேசக் கூடாது.

**Sri S. M. ANNAMALAI :** கனம் அமைச்சர் எவரையும் குறைவு படுத்த வேண்டுமென்ற கெட்ட எண்ணத்துடன் நான் அவ்வாறு பேசவில்லை. அப்படிப்பட்ட கெட்ட எண்ணம் எனக்கு இல்லை.

**Mr. SPEAKER :** கெட்ட எண்ணம் இல்லாவிட்டாலும்கூட அவ்வாறு பேச வேண்டாம் என்று கனம் அங்கத்தினரைக் கேட்டுக் கொள்கிறேன்.

**Sri S. M. ANNAMALAI :** மத்திய சர்க்கார் ஊழியர்களையும் இம்மாநில சர்க்கார் ஊழியர்களையும் ஒப்பிட்டுப் பார்க்கும் போது, படிப்பும், தரமும், வேலை அளவும், வேலைத் திறனும் இரு சர்க்கார்களின் ஊழியர்களுக்கும் சமமாக இருப்பதையும், சம்பளத்தில் மட்டும் இவர்களிடையே வித்தியாசம் இருப்பதையும் நாம் பார்க்க முடிகிறது. ஏன் இந்த வித்தியாசம் ? கனம் அமைச்சர்கள் முயற்சி எடுத்துக் கொண்டு இம்மாநில சர்க்கார் ஊழியர்களின் குறைகளை ஓரளவாவது தீர்க்க வேண்டும்.

அடுத்தபடியாக, இம்மாநில மின்சார ஊழியர்கள் தங்களுக்கு கொடுக்கப்படும் சம்பளம் போதவில்லை என்று சொல்கிருர்கள். இம்மாநிலத்தில் எப்பக்கம் பார்த்தாலும் கொந்தளிப்பு காணப்படுகிறது. ஒரு பக்கம் மின்சார ஊழியர்களின் சம்பளம் போதவில்லை என்ற கொந்தளிப்பு. இன்னொரு பக்கத்தில் N.G.O. க்களிடையே கொந்தளிப்பு. மற்ருெரு பக்கம் ஆசிரியர்களின் சம்பளம் போதவில்லை என்ற கொந்தளிப்பு. ஆனல் கனம் நிதி அமைச்சரோ, இந்த ஊழியர்கள் மாற்றுக் கட்சிகளைப் பயன்படுத்திக்கொண்டால், உண்மையிலேயே வீழ்ச்சியடைவார்கள் என்று இச்சபையின் மூலம் தாம் அவர்களுக்கு எச்சரிக்கை செய்வதாகச் சொல்லியிருக்கிருர். நாங்கள் இப்பிரச்னைகளைப் பயன்படுத்திக்கொள்ளத் தயாராயில்லை. ஆனல், நாங்கள் பயன்படுத்திக் கொள்ளக்கூடிய அளவிற்கு நிலைமையை அவர்கள் விட்டு வைக்க வேண்டாம் என்று கனம் மந்திரிகளிடம் தாழ்மையுடன் கூறிக்கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

***Sri M. JAGANNATHAN :** கனம் தலைவர் அவர்களே, " ஒழிக லஞ்சப் பேய் " என்ற கருத்தை வலியுறுத்தவும் (சிரிப்பு) இந்த வெட்டுப் பிரேரணையை ஆதரிக்கவும் நான் முன் வந்துள்ளேன். நம் மாநில சர்க்காரின் எந்த இலாகாவிலும—Secretariat level-ல் இருக்கும் நிலைமையைப்பற்றிச் சொல்ல நான் முன்வரவில்லை, District level-ல் இருக்கும் நிலைமையைப் பற்றியே குறிப்பிடுகிறேன். இப்போது லஞ்சம் தாண்டவமாடுகிறது. District level-ல் இருக்கும் எந்த ஒரு ஆபீஸையாவது எந்த ஒரு இலாகாவையாவது எடுத்துக்கொண்டாலும், அதில் லஞ்சம் என்ற பேய் தலைவிரித்துத் தாண்டவமாடிக் கொண்டிருப்பதை நாம் பார்க்கமுடியும். நீதி மன்றங்களில் கூட லஞ்சம் அதிகமாக வளர்ந்து வருகிறது என்று நான் மிகுந்த வருத்தத்துடன் சொல்லிக்கொள்கிறேன். சதாரணமாக, ஸப் மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டுகளில்கூட லஞ்சம் அதிகமாகக் காணப்படுகிறது. ஒரு குற்றவாளியை ஜாமீனில் விடுதலை செய்ய வேண்டுமென்று மாஜிஸ்டிரேட் உத்தரவு போட்டாலும், அந்தக் கோர்ட்டில் இருக்கும் Head Clerk அந்த உத்தரவை உடனடியாக நிறைவேற்றுவது கிடையாது. காலை 11 மணிக்கு மாஜிஸ்ட்ரேட் உத்திரவு போட்டால், Head Clerk அவசியமான தஸ்தாவேஜிகளை எழுதித் தயாரித்து அவைகளை ஜெயில்

[Sri M. Jagannathan] [1st April 1958

வார்டனுக்கு அனுப்பி ஜெயிலில் இருக்கும் குற்றவாளியை வெளியே அனுப்புவதற்கான நடவடிக்கையை, மாலை 5 மணி வரையில் எடுப்பதில்லை. குற்றவாளியிடமிருந்தோ, அவருடைய உறவினர்களிடமிருந்தோ அல்லது நண்பர்களிடமிருந்தோ ஏதாவது பணம் கிடைத்தால் அதைப் பெற்றுக் கொண்டு அவரை வெளியே அனுப்பலாம் என்ற எண்ணத்தில் **Head Clerk** இப்படிச் செய்கிறார். இந்த சந்தர்ப்பத்தில் நான் இன்னொன்று சொல்ல விரும்புகிறேன். அதாவது, அந்தக் குற்றவாளியி டமிருந்து வக்கீலுக்கு 5 ரூபாய் பீஸ் கிடைத்தாலும், **Head Clerk**-க்கு 10–15 ரூபாய் கிடைத்தால் தான் குற்றவாளி ஜாமீனில் விடுதலையடைய முடிகிறது.

**MR. SPEAKER : How is the Hon. Minister responsible for this ? The discussion must be relevant.**

*** SRI M. JAGANNATHAN : The Hon. Minister has control over the Department. He has to exercise supervision in or order to see that corruption is put an end to. Only in that respect, I am referring to this, Sir.**

நீதி மன்றங்களில்கூட இம்மாதிரியான நிலைமை இருப்பது ரொம்பவும் வருந்தத்தக்க விஷயம். மேலும், ஒரு குற்றவாளிக்கு சம்மன் கொடுப்பதற்கு உத்தரவு போடப்பட்டால், அங்குள்ள **clerk**-கள், அவர்களுக்கு ஒன்றிரண்டு ரூபாய் கொடுத்தால் தான், சம்மனை சம்பந்தப்பட்டவர்களுக்குக் கொடுக்கிறார்கள் என்றால், இதைவிட வெட்கப்படத்தக்க கேவலமான நிலை வேறெதுவும் கிடையாது. இந்த ஆட்சியாளர்கள் ஏன் இப்படிப்பட்ட காரியங்கள் நடப்பதை கவனிக்காமல் லஞ்சத்தை ஒவ்வொரு இலாகாவிலும் வளர விட்டிருக்கிறார்கள் என்று நாம் பார்க்கும்போது, இவர்களுக்கு நிர்வாகத் திறமை குறைவாக இருக்கிறது என்ற முடிவுக்கு நாம் வர வேண்டியிருக்கிறது.

மேலும், ரெவினியூ இலாகாவிலும் லஞ்சம் தாண்டவமாடுகிறது. நிலமில்லாத ஒரு சாதாரண ஏழை விவசாயி ஏதாவது புறம்போக்கு நிலத்தை தனக்கு ஆர்ஜிதம் செய்துகொள்ள விரும்பினால், அவன் முதலில் கிராம உத்தியோகஸ்தருக்கு லஞ்சம் கொடுக்க வேண்டியிருக்கிறது. அவன் மணியகாரருக்கோ கணக்குப்பிள்ளைக்கோ லஞ்சம் கொடுத்தால் தான் அவர் அவனுடைய மனுவை மேலதிகாரிக்கு சிபாரிசு செய்வார். இந்த லஞ்சம் அத்துடன் நின்று விடுவதில்லை. கிராம உத்தியோகஸ்தருக்கு மேல் இருக்கும் ரெவினியு இன்பெக்டருக்கு 20–30 ரூபாய் கொடுத்தால் தான் அந்த மனுவை அவர் சிபாரிசு செய்வார். அதற்குப் பிறகு தாசீல்தாருக்கு லஞ்சம் கொடுக்க வேண்டும். இந்த மாதிரி எந்த இலாகாவிலும், உத்தியோகஸ்தர்கள், லஞ்சம் வாங்குவதையே தங்கள் தொழிலாகக் கொண்டிருக்கிறார்கள். இந்த நிலைமை இருந்தால், அரசாங்க நிர்வாகத் துறையில் நாணயமும் கண்ணியமும், சுயராஜ்யம் வந்த பிறகு, நம் மாநிலத்தில் மிகவும் குறைந்து வருகின்றன என்ற முடிவுக்குத்தான் நான் வர வேண்டியிருக்கிறது. இது உண்மையிலேயே மிகமிக வருந்தத்தக்கது. இந்த நிலைமையை சர்க்கார் மாற்ற வேண்டும். சர்க்கார் உடனடியாக ஒரு கமிட்டியை நியமித்து, ஒவ்வொரு இலாகாவில் இருக்கும் நிலைமையையும் சரிவரப் பரிசீலனை செய்து, தகுந்த வழி வகைகளைக் கண்டு பிடித்து லஞ்ச ஊழலை அறவே ஒழிக்க முன்வர வேண்டும்.

இப்பொழுது ஏதோ அவர்கள் **Anti-corruption Committee** என்று ஒன்று போட்டிருப்பதாக நான் கேள்விப்படுகிறேன். ஆனால், அந்தக் கமிட்டி உண்மையிலேயே செயல் படுகிறதா என்று பார்த்தால்,
11-30 a.m. அதைப் பற்றி நாம் அவ்வளவு பெருமையாகப் பேசுவதற்கில்லை. லஞ்சத்தை ஒழிக்கும் அந்தக் கமிட்டியானது இதுவரையில் நல்ல முறையிலே செயலாற்றி, லஞ்சத்தைக் கையாளுகிற உத்தியோகஸ்தர்களை எந்த இலாகாவிலாவது கண்டு பிடித்திருக்கிறார்களா? கண்டு பிடித்து தண்டனை விதித்திருக்கிறார்களா என்று பார்த்தால் அதுவும் இல்லை. ஆகவே, இந்தக் கமிட்டி பெயரளவில் இருக்கிறதே தவிர, " நாங்கள் லஞ்சத்தை

1st April 1958] [Sri M. Jagannathan]

வளரவிடதில்லே, லஞ்சத்தை தடுப்பதற்கு கமிட்டி நியமனம் செய்திருக்கிறோம், அது தீவிரமாக வேலே செய்கிறது" என்று சர்க்கார் தரப்பிலே பொதுமக்களுக்கு ஒரு கண் துடைப்பு விஷயமாக அவர்களுக்கு எடுத்துச் சொல்வதற்காகத் தான் இந்தக் கமிட்டி நியமனம் செய்திருக்கிறார்களே தவிர, அந்தக் கமிட்டி உண்மையிலேயே செயல்படுகிறதா, லஞ்ச ஊழலைக் கண்டுபிடித்திருக்கிறதா, அதிகாரிகளை இதுவரை தண்டிக்கச் செய்திருக்கிறதா என்று பார்த்தால் இல்லவே இல்லை. ஆகவே, இந்த நேரத்தில் நான் வலியுறுத்திச் சொல்வது என்ன வென்றால், சர்க்கார் லஞ்சத்தை இம்மாதிரி வளர விட்டுக் கொண்டு போனால் அது நம்முடைய பொது வாழ்க்கையில் ஒரு பயங்கரமான, ஆபத்தான நிலைமையை உண்டு பண்ணிவிடும் என்பதில் சந்தேகம் இல்லை. இங்கிருக்கும் காங்கிரஸ் சர்க்காருக்கு எதிர்காலத்திலேயே மக்களுடைய சுபீட்சத்திலேயும் நல் வாழ்விலேயும் நல்லெண்ணம் இருக்குமானால், அவர்கள் இந்த லஞ்சத்தை எல்லா இலாகாக்களிலிருந்தும் ஒழிப்பதற்கு உடனடியாக நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும்.

கனம் அமைச்சர்கள் நம்முடைய மாநிலத்திலே பல இடங்களில் சுற்றுப்பிரயாணம் செய்கிறார்கள். ஆங்காங்கே அவர்களுக்கு அழைப்புகள் வருகின்றன என்ற பெயரால் அவர்கள் சுற்றுப்பிரயாணம் செய்கிறார்கள். இப்படி சுற்றுப்பிரயாணம் செய்வதனால் ஓரளவு மக்களுக்கு நன்மை ஏற்படுகிறது என்று காங்கிரஸ் தரப்பிலிருந்து பேசப்பட்ட போதிலும் என்னுடைய அபிப்பிராயம் என்னவென்றால், அது மக்களுக்கு நன்மை செய்வதற்குப் பதிலாக ஓரளவு தீமையையும் செய்கிறது என்பது தான். ஏனென்றால், அங்கிருக்கும் அதிகாரிகள், ஒரு அமைச்சர் ஒரு இடத்திற்கு விஜயம் செய்தால், அந்த அதிகாரிகளெல்லாம் அமைச்சர்களைப் புடை சூழ்ந்துகொண்டு போவதற்கு தங்களுடைய வேலைகளையெல்லாம் விட்டு விட்டு அங்கே வந்து விடுகிறார்கள். ஆகவே, அவர்களுடைய நிர்வாக மானது மிகவும் பாதிக்கப்படுகிறது. உதாரணமாக பார்க்கப்போனால் போலீஸ் இலாகாவை எடுத்துக்கொள்ளலாம். ஒரு அமைச்சர் ஒரு இடத்திற்குப் போகிறார் என்றால் அந்த அமைச்சர் போகிற வழியிலே காலை முதல் மாலை வரையில் போலீஸ்காரர்களெல்லாம் வரிசையாக கால்கடுக்க நிற்கவைக்கப்படுகிறார்கள். அவர்கள் வெய்யிலில் பட்டினியிலும் பசியிலும் அங்கேயே நின்றுக்கொண்டிருக்க வேண்டும்—மந்திரி போனாலும் சரி, போகாவிட்டாலும் சரி. போலீஸ்காரர்கள்—பாவம்—மிகவும் கஷ்டத்தோடு அந்த வழி முழுதும் வரிசையாக நின்று காவல் காத்துக் கொண்டிருக்கவேண்டும். போலீஸ்காரர்களுடைய வழக்கமான கடமை **(regular duty)** யிலிருந்து இம்மாதிரி அடிக்கடி அவர்கள் திருப்பப்பட்டால், எப்படி அவர்கள் தங்களுடைய கடமையைச் செய்ய முடியும் ? குற்றங்களைக் கண்டு பிடித்து, குற்றவாளிகள் மீது கேஸ் போட்டு, நீதிமன்றங்களுக்கு அந்த வழக்குகளை எடுத்துச்சென்று குற்ற வாளிகளுக்குத் தண்டனை வாங்கித் தருவது தான் போலீஸ்காரர்களுடைய கடமை. அதை விட்டு விட்டு நாளுக்கு நாள், வருஷத்திற்கு வருஷம், மாதத்திற்கு மாதம் மந்திரிகளைப் பாதுகாக்க வேண்டுமென்றால், போலீஸ் காரர்கள் வீதியிலும் தெருவிலும், ரோடுகளிலும் நிறுத்தி வைக்கப்படு வார்களானால் எப்படி போலீஸ் நிர்வாகம் சரிவர நடைபெறும் ; எப்படி குற்றவாளிகளைக் கண்டு பிடிப்பார்கள் ? ஆகவே, மந்திரிகள் இம்மாதிரி சுற்றுப்பிரயாணங்களைக் குறைத்துக்கொள்ள வேண்டும். இன்றியமையாத காரணங்கள் இருந்தாலொழிய அடிக்கடி இம்மாதிரி சுற்றுப்பிரயாணம் செய்வது விரும்பத் தக்க விஷயம் அல்ல என்பதை நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

இத்துடன் என்னுடைய உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

SRI A. V. P. ASAITHAMBI : கனம் தலைவர் அவர்களே, மந்திரிகளைப் பற்றிய இந்த மான்யக் கோரிக்கை மீது பேசும்போது, இங்கே எட்டு மந்திரிகளும் இருக்கவேண்டியதிருக்க, இரண்டே இரண்டு மந்திரிகள் 11-35 a.m.

[Sri A. V. P. Asaithambi] [1st April 1958

மாத்திரம் அமர்ந்திருப்பதானது மிக மிக வருந்தத்தக்கது என்று நான் கருதுகிறேன். பொதுவாக, இந்த மான்யத்தின் மீது பேசிய அங்கத்தினர் களில் பெரும்பாலோர் இந்த அரசாங்கம் நிர்வாகத் திறமைக் குறைவாக இருக்கிறதென்பதை எடுத்துக்காட்டிப் பேசினார்கள். நான் நினைக்கிறேன் இந்த அரசாங்கத்திலே பொதுவாக நிர்வாகத் திறமைக் குறைவு இருப் பதற்குக் காரணம், எட்டு மந்திரிகளுக்குள்ளே மாத்திரம் இந்த நிர்வாகம் சுழன்று கொண்டிருப்பதுதான். இந்த எட்டு மந்திரிகளை—பணம் போனாலும் போகிறது என்று கருதி—16 மந்திரிகளாகப் போட்டு, இலாகாக் களை இன்னும் சம பங்காகப் பிரித்துக்கொண்டு வேலை நடக்கும் என்று சொன்னால், எவ்வளவு அதிகமான செலவாகிறதோ, அதற்குமேல் லாபம் கிடைக்கும் என்பது என்னுடைய கருத்து. ஏன் நான் இதைச் சொல்கிறேன் என்று சொன்னால், கேள்வி நேரத்தின்போது இங்கே அங்கத்தினர்கள் பல கேள்விகளைக் கேட்கிறார்கள். அமைச்சர்களுக்கு அடிக்கடி கோபம் கூட வருகிறது—சுற்றிச் சுற்றி வளைத்து வளைத்துக் கேள்வி கேட்கிறார்களே என்று. இந்த இலாக்காக்களை இன்னும் சில பல மந்திரிகளைப் போட்டு அவர்களுக்கெல்லாம் பிரித்துக்கொடுத்து, அது சம்பந்தப்பட்டவைகளில் அவ ரவர்கள் பதில் சொல்லும்படியான நிலைமை வருமானால், சில மந்திரிகள் பதில் சொல்வதற்குத் தினறுகிற தன்மை மாறும். எனவே, செலவு எவ்வளவு ஆனாலும் பரவாயில்லை என்பதை வைத்து மந்திரிகளுடைய எண்ணிக்கையை தயவு செய்து கூட்டும்படியாக நான் கேட்டுக்கொள்ளு கின்றேன். நான் ஒன்றும் மந்திரியாவதற்கு அப்ளிகேஷன் போடவில்லை. (சிரிப்பு.) மற்றவர்களுக்கு அந்தச் சான்ஸ் கிடைக்கும் என்ற எண்ணம் எனக்கு இருக்கிறது. கிடைத்தால் நிர்வாகம் நன்றாக நடக்கும் என்பது தான் என்னுடைய ஆசை.

பொதுவாக ஒவ்வொரு மந்திரியினுடைய இலாகாவையும் பற்றிச் சொல் லலாம். உதாரணமாக போலீசுத் துறை அமைச்சர் கனம் திரு. பக்த வத்சலம் அவர்களுடைய இலாகாவை எடுத்துக்கொண்டால் அதில் அதிகம் ஊழல் இருக்கிறதென்பதை நாம் பார்க்கிறோம். போலீஸ் இலாகாவா னது கனம் திரு. பக்தவச்சலம் அவர்கள் கைக்கு மாறி, இந்த மந்திரி சபை பீரியட்டிலே, வந்ததிலிருந்து நாம் பார்க்கிறபோது, இந்த நாட்டிலே எங்கேயும் அமைதி நிலவுவதாக நாம் சொல்ல முடியவில்லை. ஒன்று போனால் ஒன்று வந்துகொண்டே இருக்கிறதென்பதைப் பார்க்கிறோம். அந்த அளவுக்கு இந்த நாட்டில் அமைதிக்குறைவு அடுத்து அடுத்து ஏற்படுகிறது. இந்த அமைதிக் குறைவுக்கு இருக்கக்கூடிய காரணங்களை நாம் அலசிப்பார்த்தோம் என்று சொன்னால் மந்திரியவர்கள் இம்மாதிரி நடந்துகொண்ட பொறுப்பற்ற முறைதான் அதற்குக் காரணம் என்பதை நாம் பல இடங்களிலே கண்டிருக்கிறோம். இந்த இடத்திலேயும் கனம் அங்கத்தினர்கள் பல சமயங்களிலே குறிப்பிட்டிருக்கிறார்கள். உதாரண மாக கோடம்பாக்கம் விசாரணை நடக்கிறது. அதைப்பற்றி பேசக்கூடாது என்பது எனக்குத் தெரியும். ஆனால், இம்மாதிரியான ஊழல்கள் நடக் கிறபோது மந்திரிகள் கடைப்பிடிக்கிற கொள்கை என்னவென்று பார்த்தால், போலீஸ் அமைச்சருடைய இலாகாவிலே ஒன்று இரண்டு அல்ல. முதுகுளத் தூரில், சென்னையில் ஜனவரி 3-ந்தேதி, இப்பொழுது அண்ணாமலை பல்கலைக் கழகத்திலே ஒன்று இம்மாதிரி வரிசையாக ஒன்றின்மேல் ஒன்று நடந்துகொண்டிருக்கிறது. கோடம்பாக்கம் விஷயத்திலும் ஒரு குற்றச்சாட்டு இருந்து கொண்டிருக்கிறது. இம்மாதிரியான நிலைமைகளிலே மந்திரி என்ன செய்யவேண்டும் ? மற்ற இடங்களில் என்ன செய்திருக்கிறார்கள் ? அரியலூரைப் பொறுத்தவரையில் ஏதோ ஒரு ரயில் கவிழ்ந்தது, உடனே மந்திரி ராஜீனாமா செய்தார். அங்கே மத்திய சர்க்கார் மந்திரி ஏதோ இன் ஷூரன்ஸிலே ஊழல் செய்தார் என்பதற்காக உடனே டி.டி. கேயை இங்கே அனுப்பிவைத்துவிட்டார்கள். ஆனால், பக்தவத்சலம் அவர்கள் இன்னும் போகவே காணோம். இன்னும் இருந்துகொண்டிருக்கிறார். அது தான் ஆச்சரியமாக இருக்கிறது. ஏன் சொல்கிறேன் என்றால் லண்டனிலே அதிகாரி ஒருவரை கன்னத்தில் அடித்துவிட்டதற்காக வேண்டி, ஹோம் இலாகாவின் பொறுப்பாக இருக்கும் ஒருவர் பதவியை ராஜீனாமா

1st April 1958] [Sri A. V. P. Asaithambi]

செய்திருக்கிறார். இங்கே யாரால் ஒருவருக்கு ஆபத்து ஏற்பட்டதோ அந்த சாதாரண அதிகாரியை சஸ்பெண்டு செய்து வைத்து விசாரணை நடத்துங்கள் என்று சொன்னால், அதைச் செய்வதில்லை. இந்த நிலைமையிலே இருக்கிறது இங்கே.

**Mr. SPEAKER** : கனம் அங்கத்தினர் சொல்வது போலீஸ் மான்யத்திலே பேசியாகிவிட்டது.

**Sri A. V. P. ASAITHAMBI** : ஒவ்வொரு இலாகாவையும்பற்றி பேசுகிறேன்.

**Mr. SPEAKER** : போலீஸ் மான்யத்தில் பேசியாய்விட்டதை, இந்த மான்யத்தில் பேசி என்ன பிரயோஜனம் ?

**Sri A. V. P. ASAITHAMBI** : இந்த மந்திரிகள் ஒவ்வொருவரைப்பற்றியும் எடுத்துக்கொண்டு பேசினோம் என்று சொன்னால் எனக்கு முன்பு பேசினவர்கள் சொன்னார்கள், மந்திரிகள் போகிற இடங்களிளெல்லாம் கட்சிப் பிரசாரத்திற்காக மக்களுடைய பணத்தை வாங்கிக்கொண்டு பேசுவதாகக் குறிப்பிட்டார்கள். அதை சில சமயங்களிலே அமைச்சரிடத்தில் கேட்டால் ஒருவேளை "நான் கட்சிப் பிரசாரத்திற்குப் போகும்போது அம்மாதிரி செய்வது கிடையாது" என்று சொல்லலாம். ஆனால், குறிப்பாக நான் சர்க்கார் கட்சித் தலைவரைக் கேட்கிறேன்—மதுரையில் கடந்த இரண்டு மாதங்களுக்கு முன்பாக சர்க்கார்க் கட்சித் தலைவரும், முதலமைச்சரும், திரு. பக்தவத்சலம் அவர்களும் எல்லோரும் பேசினார்கள். இது சர்க்காரிலே பணம் வாங்கிக்கொண்டு வந்ததா ? அல்லது பணம் வாங்காமல் வந்ததா ? என்று தயவு செய்து அவர்கள் விளக்கவேண்டும். ஏனென்று சொன்னால் அங்கே பேசியது எல்லாம் திராவிட முன்னேற்றக் கழகத்தைத் தாக்கிப் பேசப்பட்டது. இதேமாதிரி அண்ணாமலை நகருக்கு அமைச்சர் சுப்பிரமணியம் அவர்கள் 29-ந் தேதி சர்வகலாசாலைக்கு சென்றிருந்தார்கள். 30-ந் தேதி பொதுக்கூட்டத்தில் பேசியிருக்கிறார்கள். அங்கேயும் திராவிடக் முன்னேற்றக் கழகத்தைத் தாக்கித்தான் பேசியிருக்கிறார்கள். இதற்குள் டி.எ. வாங்கியிருக்கமாட்டார்கள். நான் பேசிவிட்டதனால் வாங்காமலும் விட்டு விடலாம். இதேபோலத்தான் கட்சியைப் பற்றி பிரசாரம் செய்கிற இடங்களுக்கு அமைச்சர்கள் செலவுத் தொகை அரசாங்கத்திடமிருந்து பெறக்கூடாது என்று சொல்லுகிறேன். அதோடு இன்னொரு கேள்வி நேரத்தின் போது போலீஸ் மந்திரியைக் கேட்டேன். எதிர்க் கட்சியில் இருக்கிற நாங்கள் பேசும்போது சுருக்கெழுத்தாளர்களை அனுப்பி குறிப்பு எடுக்கிறார்கள். ஆட்சேபகரமாகப் பேசுகிறோமா, இல்லையா, என்ன பேசுகிறோம் என்பது கவனிக்கப்படுகிறது. அப்படி அமைச்சர் அவர்கள் பேசுகிற இடங்களுக்கு சுருக் கெழுத்தாளர்கள் அனுப்பப்படுவதில்லை. அமைச்சர்கள் என்றால் சட்டவிரோதமாகப் பேசமாட்டார்கள் என்று நினைக்கிறார்கள். இந்த அமைச்சர் அவையில் உள்ள ஒருவர் நான் பெயரைச் சொல்ல விரும்பவில்லை— "நாங்கள் நினைத்தால் அறிவகத்தை மண மேடாக்க முடியும்" என்று பேசியிருக்கிறார். (அறிவகம் என்றால் பள்ளிக்கூடம் என்றும் சொல்லலாம். எங்கள் கட்சியையும் குறிக்கும்). இந்தமாதிரி அமைச்சர் அவைகள் பேசுவது பொறுப்புடைய செய்கையாகுமா ? யார் பேசுவதாக இருந்தாலும் சுருக்கெழுத்தாளர்களை அனுப்பி குறிப்பெடுப்பது தான் சரியாகும். கனம் சுப்பிரமணியம் அவர்கள் இந்தச் சபையிலேயே திராவிட முன்னேற்றக் கழகம் காங்கிரஸ் கட்சியைத் தாக்கவேண்டும் என்பதற்காக வெளிநாட்டிலிருந்து எங்களுக்குப் பணம் வருகிறதாகச் சொல்கிறார். இப்படி மந்திரி சொல்லக்கூடாது. மற்றவர்கள் சொல்லலாம். அமைச்சருக்குத் தெரியாமலா எங்களுக்குப் பணம் வரும் ? வருகிறது என்று தெரிந்திருந்தால் ஏன் நடவடிக்கை எடுத்திருக்கக் கூடாது ? ஆகவே இனியாவது அமைச்சர் அவர்கள் பொறுப்போடு பேசுவதற்குத் தெரிந்து கொள்ளவேண்டும். அந்தப் பொறுப்பு எங்களுக்குமாத்திரம் அல்ல.

11-40 a.m.

இரண்டாவதாக ஒன்று சொல்ல விரும்புகிறேன். நாங்கள் எது சொன்னாலும் அதைத் தட்டிக் கழித்துவிட்டு எப்படியோ அதை நிறைவேற்றி விடுகிறார்கள். எண்டர்டெயின்மெண்டு டாக்ஸ் கொண்டுவந்தபோதே நான் சொன்னேன். தியேட்டர்காரர்கள் கட்டணத்தை உயர்த்திவிடக்கூடும் என்று இந்தக் கட்சியில் இருந்து பலராலும் சொல்லப்பட்டது. அதைப் பரிசீலனை கூடச் செய்து பார்க்காமல் அது எல்லாம் இல்லை என்றார்கள் தியேட்டர்காரர்களோடு பேசிக்கொண்டிருந்தோம். அவர்கள் வந்து பார்த்தார்கள். உயர்த்தினால் வசூல் ஆகாது. ஆகவே உயர்த்தமாட்டோம் என்று சொல்லி விட்டார்கள் அப்படிச் சொல்லி எங்கள் வார்த்தையை தட்டிக் கழித்துவிட்டார்கள். ஆனால் இன்றையதினத்திலிருந்து கட்டணம் உயர்த்தப்படுகின்றது. அப்பொழுதே எதிர்கட்சிக்காரர்கள் சொல்வதில் நியாயம் இருக்கிறதா, அப்படியானால் என்ன செய்யவேண்டும், தியேட்டர்காரர்கள் கட்டணத்தை உயர்த்தாமல் இருப்பதற்கு என்ன செய்யவேண்டும் என்பதைப்பற்றி யோசித்து நடவடிக்கை எடுத்திருந்தால் இந்த நிலைமை ஏற்பட்டிருக்காது. அதே போலத்தான் 29-ந்தேதி அண்ணாமலை சர்வகலாசாலைக்குப் போனார்கள். 30-ம்தேதி அங்கே கலவரம் நடந்திருக்கிறது. வேறு இலாகா அமைச்சர் கூட இல்லை ஸ்ரீ சுப்பிரமணியம், கல்வி இலாகா அமைச்சர். சர்க்கார் கட்சித் தலைவர். அங்கேயே இருந்து கலவரம் ஏற்பட்டதற்குரிய காரணங்களை ஆராய்ந்து சுமுகமாக நிலைமையை உண்டாக்குவதற்குத் தக்க நடவடிக்கை எடுத்திருக்கக் கூடாதா? அவசரப்பட்டுக்கொண்டு இங்கே 31-ம் தேதியே வந்து செக்ரடேரியட்டில் உட்கார்ந்து போன் மூலமாக விசாரிக்கவேண்டிய அவசியம் என்ன? இங்கே அப்படிப்பட்ட காரியம் நேற்று என்ன இருந்திருக்கிறது. நவகாளியில் கொலையும், கொள்ளையும் நடந்தபோது அந்த இடத்திற்கு காந்திஜி சென்று கலவரத்தை அடங்கச் செய்து மக்களுக்கு சேவை செய்தார். ஆனால் நமது அமைச்சர் கலவரம் ஏற்பட்ட இடத்திலேயே இருந்தும் நழுவிக்கொண்டு வந்துவிட்டார் என்றால் இது பொறுப்புள்ள செயலாகுமா என்று கேட்கவிரும்புகிறேன்.

**Mr. SPEAKER :** அமைச்சர் அவர்கள் இனிமேல் தான் அதுபற்றி என்ன என்ன நடவடிக்கையை எடுத்துக்கொண்டார்கள் என்பதற்கு ஸ்டேட்மெண்டு தரப்போகிறார். அதற்குள் நீங்கள் குற்றம்சாட்டி பேசுகிறீர்களே.

**Sri A. V. P. ASAITHAMBI :** இங்கிருந்து என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டார் என்று நான் கேட்கவில்லை. அந்த இடத்தில் அந்த சமயத்தில் அவர் அங்கேயே இருக்கும்போது ஏன் அங்கிருந்தே இந்த நிலைமைக்கு சுமுகமான முடிவைக் கண்டிருக்கக்கூடாது என்று சொல்லவிரும்புகிறேன். இங்கே தலைபோகிற காரியம் என்ன? மாணவர்களுடைய பரிட்சையையே ஒத்தி வைத்து சர்வகலாசாலையை மூடக்கூடிய நிலைமை உண்டாகியிருக்கிறது என்றால் இவர் அங்கேயே இருந்து கவனித்திருக்கவேண்டாமா? இவருக்கு இங்கே சொந்த வேலை ஒன்றும் இல்லை என்றாலும் முதல் மந்திரி இதர மந்திரிகளின் வேலை இருந்து வந்திருக்கலாம் என்றாலும்—அதற்காகத்தான் சொல்கிறேன். இன்னும் கொஞ்சம் மந்திரி சபையை விரிவுபடுத்தி எழெட்டு பேர்களைப் போட்டுக்கொள்ளுங்கள் என்று சொல்கிறோம். சம்பளம் பற்றிக் கவலை யில்லை. இன்னொன்று சொல்ல விரும்புகிறேன். இங்குள்ள எம்.எல்.ஏ.-க்களுக்கு இந்த மாகாணத்திற்குள் எந்த இடத்திலிருந்து எந்த இடத்திற்குப் போவதானாலும் ரயில்வே மூலமாக பாஸ் கொடுப்பதற்கு ஏற்பாடு செய்துவிடலாம். பார்லிமெண்டு எம். பி.க்-களுக்கு அதுமாதிரி கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்தியாபூராவும் அவர்கள் சுற்றிப் பார்த்து விஷயங்களைத் தெரிந்து கொள்ள முடியும். இந்த மாகாணத்தைப் பொறுத்த மட்டிலுமாவது எங்கெங்கே என்ன என்ன நடக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ள எம்.எல்.ஏ.-களுக்கு முதல் வகுப்போ, இரண்டாவது வகுப்போ—இல்லை ஒரு ஸ்பெஷல் வகுப்பு பாஸோ கொடுக்க நமது சர்க்கார் ஏற்பாடு செய்யவேண்டும். (ஒரு மெம்பர் :—முதல் வகுப்பே கொடுக்கச் சொல்லுங்கள்) இவர் சொல்வதுபோல முதல் வகுப்பு பாஸே கொடுக்க ஏற்பாடு செய்யலாம். எங்கள் கட்சிக்காரர்களுக்கு மாத்திரம் அல்ல, எல்லா

1st April 1958] [Sri A. V. P. Asaithambi]

அங்கத்தினர்களுக்கும் உதவியாக இருக்கும். எம்.பி.க்-களுக்கு இருக்கிற சலுகை நமக்கு ஏன் இருக்கக் கூடாது ? இன்றைக்கு நான் சென்னையில் இருக்கிறேன். நாளைக்கு விருதுநகரில் இருக்கக்கூடாதா ? இவற்றை யெல்லாம் சர்க்கார் கவனித்துத் தக்க நடவடிக்கை எடுக்கவேண்டு மென்பதாகக் கேட்டுக் கொண்டு நான் முடித்துக்கொள்கிறேன்.

*SRIMATHI A. S. PONNAMMAL : கனம் சபாநாயகர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் கோரியிருக்கும் மான்யத்தை ஆதரித்து நான் சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன், கனம் அமைச்சர் அவர்கள் சுற்றுப்பிரயாணம் செய்யும்போது கட்சியைப்பற்றிப் பிரசாரம் செய்வதாகவும், அதிகாரிகளை எல்லாம் கூப்பிட்டு தங்களுடன் நிறுத்திவைத்துக் கொண்டு வேலை நடைபெறுமல் செய்வதாகவும் பல அங்கத்தினர்கள் குறிப்பிட்டார்கள். இதை வரவேற்பதற்கில்லை. வன்மையாகக் கண்டிக்கிறோம் என்றார்கள். மக்களுடைய வாக்குச் சீட்டைப் பெற்று ஒவ்வொரு அங்கத்தினரும் மக்களுக்குச் சேவை செய்வோம் என்று உறுதி கூறிவிட்டு இங்கே வந்திருக்கிறோம். மந்திரி அவர்கள் அதிகாரிகளை தாங்கள் போகும் இடங்களுக்கு வரவழைப்பது மக்கள் கொடுக்கிற மகஜர்களை உடனடியாகப் பரிசிலனை செய்து தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்ளச் செய்வதற்காகத் தான் என்பதைப் புரிந்து கொள்ளாமல் நாம் பொறுப்பற்ற முறையில் பேசலாமா ? மேலும் அமைச்சர்கள் சுற்றுப்பிரயாணம் செய்யும்போது ஒரு அடிக்கு ஒரு போலீஸ்காரர்கள் வைப்பதாகச் சொன்னார்கள். ஜனநாயக நாட்டில் அமைச்சர்கள் வெளியே போகும்போது போலீஸ் அவசிய மில்லைதான். ஆனால் ஒன்றை மட்டும் சொல்ல விரும்புகிறேன். அதாவது, நாட்டில் பயித்தியக்காரர்களின் கூட்டம் அதிகமாகி விட்டால், நாட்டில் கல் எறியும் கூட்டம் அதிகமாகி விட்டால், நாட்டில், செருப்பெறியும் கூட்டம் அதிகமாகிவிட்டால், போலீஸின் உதவி அவசியந்தான். மனிதப் பண்புடையவர்களாக இருந்தால், கல் எறியாதே என்று சொல்லலாம். ஆனால் மனிதப் பண்பு என்பது என்னவென்றே தெரியாத பயித்தியக் காரர்கள் உள்ள இடத்தில் போலீஸ் அவசியம் இருந்தே தீர வேண்டும். போலீஸ் இருந்தால்தான் பயித்தியக்காரர்கள் கொட்டம் அடங்கும். ஆகவே, அந்தப் பயித்தியக்காரர்கள் இருப்பதினால்தான் போலீஸ் இருக் கிறதே தவிர, அமைச்சர்களுக்கு பாதுகாப்பு அளிப்பதற்கல்ல என்று நான் இங்கு தெரிவித்துக்கொள்ள ஆசைப்படுகிறேன். திண்டிவனத்தில் நான் ஒரு பொதுக் கூட்டத்திற்குச் சென்றிருந்தேன். அங்கு ஒரு பயித்தி யக்காரக் கூட்டம், பெண்கள் வந்து பேசுகிறார்களே என்று பார்க்காமல் கல் எறிந்தார்கள். நீங்கள் கல் எறிவதற்காக நாங்கள் பயந்து கொண்டு பேசாமல் போகப் போவதில்லை என்று சொல்லி கூட்டத்தை நடத்தினோம். அவர்கள் கல் எறிந்தார்கள், பின் போலீஸ் வந்து சேர்ந்த பிற்பாடுதான் அந்தப் பயித்தியக்காரக் கூட்டம் அடங்கியது. பின்னர்தான் அங்கு அமைதி நிலவிற்று. ஆகவே, நான் சொல்வது என்னவென்றால், நாட்டு மக்களின் மத்தியில் நீங்கள் குழப்பம் ஏற்படுத்தாமல் இருந்தால் போலீஸ் பந்தோபஸ்திற்கே அவசியம் இல்லாமல் போய்விடும். அடுத்தபடியாக, அமைச்சர்களுக்கு எதற்காக இவ்வளவு சம்பளம் என்று கூறினார்கள். இங்கு நம் ராஜ்யத்தில் அமைச்சர்கள் 1,500 ரூபாய் சம்பளம் வாங்குகிறார்களே, அங்கு அவ்விதம் வாங்கவில்லையே என்று இன்னொரு ஸ்டேட்டை குறிப் பிட்டுப் பேசினார்கள். அங்கு, அந்த ராஜ்யத்தில் மூன்று ஜில்லாக்கள் தான் இருக்கிறது. ஆனால் இங்கு 12 ஜில்லாக்கள் இருக்கின்றன. ஆனால் அங்கு 11 அமைச்சர்கள் இருக்கிறார்கள். ஆனால் இங்கே எட்டு அமைச்சர் கள்தான் இருக்கிறார்கள். இங்கு நமது அமைச்சர்கள் பகல் இரவு என்று பாராமல் முழு நேரமும் வேலை செய்வதோடு, வீட்டு அலெவன்ஸ் கார் அலவன்ஸ், வருமான வரி இவைகளெல்லாம் போக ஏதோ ஒரு சிறு தொகைதான் வாங்குகிறார்கள். இன்னொரு ஸ்டேட்டை உதாரணமாகக் கூறினார்களே, அதற்கு நான் ஒன்று சொல்ல விரும்புகிறேன், அங்கு மூன்று ஜில்லாக்களுக்கு 11 அமைச்சர்கள் என்றால் இங்கு 12 ஜில்லாக் களுக்கு 44 அமைச்சர்கள் போடவேண்டும். ஆனால் அந்த மாதிரி மந்திரி பதவிக்கு இங்கு யாரும் அடித்துக் கொள்ளவில்லை. ஆனால் அப்படி மந்திரி பதவி கிடைக்க வேண்டுமென்று ஆசைப்படுகிற அங்கத்தினர்களுக்கு

11-50 a.m.

[Srimathi A. S. Ponnammal] [1st April 1958

மந்திரி பதவி வரப்போவதில்லை என்று தெரிவித்துக்கொள்கிறேன். மந்திரி சபையை விஸ்தரித்து அதில் இடம் பேற வேண்டுமென்று நாங்கள் விரும்பவில்லை. இப்பொழுதே நிர்வாகம் நன்கு நடைபெறுகிறது. அடுத் தபடியாக லஞ்ச ஒழிப்புபற்றி இங்கு கூறப்பட்டது. லஞ்சம் ஒருசில இடங்களில் இருக்கத்தான் இருக்கிறது. ஆனால் அதற்காக எல்லா இலாகாக்களிலும் எல்லாஅதிகாரிகளும் லஞ்சம் வாங்குகிருர்கள் என்றுசொல் வதில் அர்த்தமில்லை. லஞ்சம் கொடுக்கிறவர்கள், நியாயமற்ற காரியத்தைச் செய்வதற்குத்தான் லஞ்சம் கொடுக்கிருர்கள். லஞ்சம் கொடுக்கும் பழக்கம் எங்களுக்கில்லை, ஒரு வேளை கனம் அங்கத்தினர் அவர்களுக்கு நான் தைரியமாகச் சொல்வேன், என் தொகுதியில் உள்ள அத்தனை அதிகாரி களும் நல்ல முறையில்தான் வேலை செய்கிருர்கள் அங்கு லஞ்சம் என் பதே கிடையாது. எந்தக்காரியமானுலும் சரி, பணக்காரன் ; ஏழை என்ற வித்தியாசமின்றி அதிகாரிகள் நன்கு திறம்பட வேலை செய்து வருகிருர் கள். அடுத்தப்படியாக கவர்னரைப் பற்றி இங்கு சொல்லப்பட்டது. இது கேட்டுக் கேட்டு புளித்துப் போய்விட்டது. நிதியமைச்சர் அவர்கள் திராவிட முன்னேற்றக் கழகத்தைப் பற்றி எங்கு போனாலும் பேசுகிருர்கள் என்று சொன்னுர்கள். அந்த அளவிற்கு அவர்களது கட்சி வளர்ந்து விடவில்லை என்று நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அடுத்தபடியாக எங்கள் கட்சியைப்பற்றிப் பேசப்பட்டது. எங்கள் கட்சிக்கு பிரசாரம் தேவை யில்லை. மஹாத்மா காந்தி அவர்களால் வளர்க்கப்பட்ட அந்த புனிதமான ஸ்தாபனம் இதுவரை என்னென்ன காரியங்கள் செய்திருக்கிறது, இனி என்ன என்ன செய்யவிருக்கிறது என்று சொல்கிறோமே தவிர, கட்சிப் பிரசாரத்திற்காக நாங்களும், அமைச்சர்களும் எதுவும் பேசுவதில்லை. நேற்று அண்ணாமலை யுனிவர்ஸிட்டியில் நடந்ததைப் பற்றிச் சொன்னுர்கள். காம வெறியை ஊட்டக்கூடிய சினிமா வசனத்தை மாணவர்களின் மத்தியில் புகுத்தி அவர்களின் மனதை கெடுப்பது திராவிட முன்னேற்றக்கழகமே தவிர வேறொன்றுமில்லை, என்று நான் இங்கு ஆணித்தரமாக எடுத்துக் கூற விரும்புகிறேன். அமைச்சர்கள் அவர்கள் சென்ற இடத்தில் அவர்கள் கலகம் செய்தார்கள். ஆகவே, நான் சொல்ல விரும்புவது, இம்மாதிரி மாணவர்கள் உலகத்தைக் கெடுத்து விடாமல் அவர்களை நல்ல முறையில் முன்னுக்கு கொண்டு வரும்படி, தாயுள்ளம் படைத்தவள் என்பதற் காக நான் அவர்களை வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன். நம் கட்சி பெரிதாக இருக்கிறது, நம் கட்சியைப் பற்றி எல்லோரும் பிரமாத மாக எல்லோரும் பேசுகிருர்கள் என்று நினைத்துக் கொண்டு நாட்டு மக்களையும், மாணவர்களையும் கெடுத்துவிடாமல் அவர்களை நல்ல முறையில் நன்கு முன்னுக்கு கொண்டு வந்தால் நான் அதை வர வேற்பேன். அடுத்தபடியாக, ஏதோ ஒரு அமைச்சரின் பிள்ளை சர்க்கார் காரை ஓடித்து விட்டதாகச் சொல்லப்பட்டது. அந்தப் பணம் மக்கள் பணம்தானே என்று கேட்கப்பட்டது. அது மக்களின் பணந்தான். ஆனால் நேரு வந்த போது ஆறு பஸ்கள் கொளுத்தப்பட்டதே, அந்த பஸ்ஸின் பணம் மக்களின் பணம் இல்லையா? என்று கேட்கிறேன். ஏதோ ஆக்ஸிடன்டாய் அது ஏற்பட்டதே தவிர சர்க்கார் பணத்தை அழிக்க வேண்டுமென்ற நோக்கத்தோடு செய்யப்பட்டது அல்ல. ஏதோ சந்தர்ப்ப வசமாக அப்படி ஏற்பட்டு விட்டது. அடுத்தபடியாக, நான் சொல்ல விரும்புவது, திராவிட முன்னேற்றக் கழகத்தினர் தாங்கள் சொல்லித்தான் மந்திரி சபை பெரிய காரியங்களைச் செய்கிறது என்று பிரசாரம் செய்து வீண் பெருமை அடித்துக் கொள்ளவேண்டாம் என்று சொல்ல நினைக் கிறேன். அதோடு சென்ற முறை கனம் அங்கத்தினர் விநாயகம் அவர்கள் "நன்றி மறப்பது நன்றன்று : நன்றல்லாது அன்றே மறப்பது நன்று" என்று சொன்னுர்கள். ஹரிஜன் முன்னேற்றத்தைப்பற்றிச் சொல்லும்போது அதற்கு முத்துகுமாரஸ்வாமி அவர்கள் நாங்கள் நன்றி மறக்கவில்லை என்று சொன்னுர்கள். குறிப்பாக எங்கள் சமுதாயம், ஹரிஜனங்கள், பாட்டாளி மக்கள், எங்கள் நிலைமை இன்று ஓரளவு காங்கிரஸ் சர்க்காரால் உயர்ந் திருக்கிறது என்று சொல்லி தேசிய ஸ்தாபனமாகிய காங்கிரஸ் மஹா சபையை மறக்காமல் இருக்கலாம். ஆனால் ஹரிஜனங்களிலேயே படித்த ஒரு சில கூட்டம் காலத்தினால் செய்த நன்றியை மறப்பது நன்று

நன்று, நன்று அல்லாததை வாழ்நாள் பூராவும் மறவாமல் இருப்பது நன்று அல்ல அல்ல என்ற முறையில் நடந்துகொண்டு வருவதை நாம் கண்கூடாகப் பார்க்கிறோம்.

SRI M. JAGANNATHAN : On a point of elucidation, Sir.

MR. SPEAKER : Who is going to elucidate?

SRI M. JAGANNATHAN : The hon. Lady Member raised certain points and I want to ask . . .

MR. SPEAKER : The hon. Member Mr. Jagannathan, will sit down. He can rise on a point of order or on a point of personal explanation. But there is no provision for a point of elucidation. He cannot do that. When he gets a chance to speak, he can do that.

SRI M. JAGANNATHAN : Sir, I just wanted to ask . . .

MR. SPEAKER : I rule it out of order. I cannot allow that.

SRI A. GOVINDASAMY : சட்டமன்ற தலைவர் அவர்களே, இந்த மான்யத்தின் மீது கொடுக்கப்பட்டுள்ள வெட்டுப் பிரேரணையை ஆதரித்து சர்க்கார் கொண்டு வந்துள்ள மான்யக் கோரிக்கையை எதிர்த்து நான் ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். சென்றாண்டு, ஒரு கோடி நாலு லட்சத்தி எழுபத்தொன்பதினாயிரம் ரூபாய் கோரினார்கள். இந்த ஆண்டு ஒரு கோடி எழு லட்சத்தி அறுபத்திரண்டாயிரம் ரூபாய் கோரப்பட்டிருக்கிறது. சென்ற ஆண்டை விட 2,83,000 ரூபாய் அதிகமாக கோரவேண்டிய அவசியம் என்னவென்று நான் கேட்கிறேன். எதற்காக இந்த அதிகப்படிச் செலவு வந்தது, என்று பார்க்கும்போது, இந்த இலாக்காக்களை ஆடிட் செய்த வகையில் 26,000 ரூபாயும், ஸ்டாட்டிஸ்டிக்ஸ், புள்ளி விவரங்கள் தயாரிக்க 2,49,000-ம் மிஸலேனியஸுக்கு 65,000-ம் செலவாகியிருக்கிறது. இப்படி ஆடிட் செய்யவேண்டிய அவசியம் என்ன என்று பார்க்கும் போது இந்தத் தலைப்பின்கீழ் உள்ளவைகளில் அதிகமாக ஊழல்கள் ஏற்பட்டு விட்டதா? பின் எதற்காக ஆடிட் செய்தீர்கள் என்று கேட்கிறேன். பின்னர், புள்ளிவிவரங்கள் எடுத்தல், கிராமங்களில் கணக்குப்பிள்ளைகளும், மணியக்காரர்களுந்தான் புள்ளிவிவரங்கள் சேகரித்துக் கொடுக்கிறார்கள். அப்படிப்பட்டவர்களுக்கு சம்பளம் உயர்த்திக் கொடுக்கப்பட்டிருக்கிறதா என்று சொன்னால் அப்படி உயர்த்தவில்லை. 300-க்கு மேல் ஜனத்தொகை உள்ள இடங்களில் பள்ளிக்கூடங்கள் வைக்க வேண்டுமென்று அதற்காக புள்ளிவிவரங்கள் தயார் செய்து வருகிறார்கள் என்று கூறினார்கள். எடுத்த நடவடிக்கைகள் என்ன? அதனால் ஏற்பட்ட நன்மை என்ன? என்பதைப்பற்றி ஒன்றும் சொல்லவில்லை. அடுத்த படியாக, அமைச்சர்களுக்கு சம்பளம் கூடுதலாக கொடுக்கப்படுகிறது என்று சொன்னால் அவர்களுக்கு கோபம் வருகிறது. அது பற்றிய கராச்சி தீர்மானத்தை நான் இங்கு மீண்டும் ஞாபக மூட்ட விரும்புகிறேன். உள்ள படியே, மந்திரி கக்கன் அவர்களுக்கும், சுப்பிரமணியம் அவர்களுக்கும், பக்தவத்ஸலம் அவர்களுக்கும், மாணிக்கவேலு நாயக்கர் அவர்களுக்கும் அதிகம் குழந்தைகள் இருக்கிறது. அவர்கள் வேண்டுமானால் 1,500 ரூபாய் சம்பளம் வாங்கிக் கொள்ளட்டும். ஆனால் குழந்தை குட்டியில்லாத பிரமச்சாரியான நம் முதலமைச்சருக்கு ஏன் 1,500 ரூபாய் சம்பளம் கொடுக்க வேண்டும். ஆகவே, அவராவது ஒரு 500 ரூபாய் குறைத்துக் கொண்டு வழி காட்டலாம் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

இந்த அரசாங்கம் சிக்கனத்தை கையாள வேண்மென்று ஒரு சிக்கன கமிட்டியை ஸ்ரீ டி. என். எஸ். ராகவன் அவர்கள் தலைமையில் நியமித்தார்கள். அவர்கள் ஏதோ ஆலோசனைகளை சர்க்காருக்கு தெரிவித்திருப்பதாக தெரிகிறது. அதில் எவற்றையெல்லாம் நடை முறைக்கு கொண்டு

வந்தார்கள் என்று கேட்கிறேன். இதற்காக எத்தனை லட்சம் செலவு செய்யப்பட்டது என்பதற்கு இதில் புள்ளி விவரங்கள் இல்லை. இந்த சிக்கன கமிட்டி பல அரிய யோசனைகளை கூறியிருப்பதாக சொல்லுகிறார்கள். அப்படியென்றால் அவைகளையாவது இந்த சபையில் வெளியிட்டு இருக்கலாம். இதுவரையில் ஏன் அதைப்பற்றி ஒரு அறிக்கையும் வெளியிடவில்லை என்று கேட்கிறேன். இவற்றைப்பற்றி சர்க்காரிடத்தில் அறிக்கை சமர்ப்பிக்கப்பட்டு ஒரு ஆண்டுக்கு மேலாய் விட்டது. இதை அமைச்சர் அவர்கள் தெளிவாக்கவேண்டுகிறேன். அமைச்சர்கள் மாத்திரம் ஒருவிதமான சிக்கனத்தை கடைபிடித்தார்கள். அதாவது அமைச்சர்களுடைய காரில் பறந்து கொண்டிருந்த கொடியை எடுத்துவிட்டார்கள். அமைச்சர்கள் போகின்றபொழுது மக்கள் அமைச்சர்கள் போகிறார்கள் என்று தெரிந்து கொண்டு வழியில் மக்கள் அவர்களுடைய குறைகளை சொல்ல வருவார்கள். அதை தடுப்பதற்காக பயந்துகொண்டு செய்துகொண்ட முறைதான் இது என்று நான் நினைக்கிறேன். அமைச்சர்களுடைய கார் பெரிதாக இருக்கிறது, அதை சிறிய காராக வைத்துக்கொண்டால் மிச்சப்படும் என்று சொன்னால், நிதி அமைச்சர் அவர்கள்கூட கழிந்த சட்டசபைக்கூட்டத்தில் இதைப்பற்றி சொன்னபோது கோவிந்தசாமிக்கு இதைப்பார்த்து கண் உறுத்துகிறது என்று குறிப்பிட்டார்கள். அதைத்தான் இப்போதும் சொல்லுவார்கள் என்று நினைக்கிறேன். சிறிய கார் வைப்பதினால் சிக்கனப் படுத்த முடியும். ராஜாஜி அவர்கள் இருந்த காலத்தில் அவர்களே இதற்கு வழி காட்டினார்கள். கான்ஸல் கார். வைத்துக்கொண்டார்கள். இதைப்பற்றி சொல்லும்பொழுது பெரிய கார் வைத்துக்கொண்டாலும் சிறிய கார் வைத்துக்கொண்டாலும் தேய்மானம் எல்லாம் ஒன்றுதான் என்று சொல்லுகிறார் அமைச்சர் அவர்கள். இது மட்டுமல்ல, கவர்னர் அவர்களுக்கு இவ்வளவு செலவு செய்யவேண்டிய தேவையில்லை, கவர்னரே நமக்கு தேவையில்லை என்று சொன்னால், தீயணைக்கும் படை எப்படி அவசியப்படுகிறதோ, அம்மாதிரி சில நெருக்கடியான சமயங்களில் கவர்னர் பதவி அவசியம் வேண்டியிருக்கிறது என்று சொல்லுகிறார்கள். அப்படி கண்டிப்பாக இருந்துதான் தீரவேண்டுமென்றால் இரண்டு மூன்று ராஜ்யங்களுக்குச் சேர்ந்து மண்டல கவுன்ஸில் என்றெல்லாம் வைத்திருக்கிறார்களே, அது போல் இரண்டு மூன்று ராஜ்யங்களுக்கு சேர்த்து ஒரு கவர்னரை வைத்துக்கொள்ளலாம், இதைப்பற்றி மத்திய சர்க்காரிடம் யோசனை சொல்லலாம். அப்படி சொல்லுவதற்கு தயங்குகிறார்கள். சொல்லியாய்விட்டது என்று அமைச்சர் அவர்கள் கூறுகிறார்கள். அப்படியென்றால் ரொம்ப சந்தோஷம். இது மாத்திரமல்ல, சில சட்டங்களை இந்த அரசாங்கம் செய்கிறார்கள், அதை சட்டசபை முன் வைக்கிறார்கள், அதன் பின் அந்த சட்டம் எங்கேயோ போய் மறைந்து விடுகிறது. சுயமரியாதை திருமணம் செல்லுபடியாகக்கூடிய சட்டத்தை இங்கு கொண்டு வந்தார்கள். அதை நிறைவேற்றினார்கள். அது பின்னால் எங்கே கொண்டு போய் மூடி மறைத்து விட்டார்கள் என்று தெரியவில்லை. மேலும், அமைச்சர்களுக்கு அதிகமாக போர்ட் போலுயோக்கள் இருக்கின்றன. உதாரணமாக நமது சட்டசபைக்கட்சி தலைவர் திரு. சுப்பிரமணியம் அவர்களிடத்தில் நிதி இலாகாவும் இருக்கிறது, கல்வி இலாகாவும் இருக்கிறது. சில சமயங்களில் கல்விக்காக மானியங்களை கொடுக்கவேண்டும் என்று கல்வி மந்திரி என்ற முறையில் கேட்கிறார். அதே நேரத்தில் நிதி மந்திரி என்ற முறையில் சில மான்யங்களை கொடுக்க முடியாது என்று அவரே எழுதுகிறார். இரண்டு இலாகாக்களையும் வகிக்க திறமையற்றவர் என்று கருதவில்லை. இதனால் பல கஷ்டங்களும் ஏற்படுகிறது. இன்றைக்கு மெடிக்கல் இலாகாவை மதிப்பிற்குரிய மாணிக்கவேலு அவர்கள் ஏற்றிருக்கிறார்கள். அந்த இலாகா சம்பந்தப்பட்ட மட்டில் அவர்களில்? அதில் போதிய பயிற்சி பெற்றவர் அல்ல. அதுபோல்தான், மதிப்பிற்குரிய கக்கன் அவர்கள் பி.டப்ளியு. டி.-யை ஏற்றியிருக்கிறார்கள். அவர்களுக்கும் அதில் போதிய பயிற்சி இல்லை. இவ்விதம் இருப்பதினால் சில இடையூறுகள் ஏற்படுகிறது. இந்த இலாகாக்கள் சம்பந்தப்பட்டமட்டில் அந்த இலாகாவின் சில அரிய கருத்துக்களை அறிய வேண்டுமானால் அந்த இலாகாவிலுள்ள எக்ஸ்பெர்டுகளை அழைத்துத்தான் அறிய வேண்டியிருக்கிறது. ஆகவே இதில் தகுதி பெற்றிருக்கக்கூடியவர்களை டெப்யூடி மினிஸ்டர்களாக

1st April 1958] [Sri A. Govindasamy]

போடலாம். இவ்விதம் இருந்தால் அமைச்சர்களை என்ஜினியர்கள், டாக்டர்கள் ஏமாற்ற முடியாது என்பதை கூறிக்கொள்ள விரும்புகிறேன். கக்கன் அவர்களை சம்மந்தப்பட்ட இலாகாவை பொறுத்தவரையில் ஒரு விஷயத்தை தெரிவிக்க விரும்புகிறேன். சாத்தனூர் அணைக்கட்டினால் என்னுடைய தொகுதி பாதிக்கப்படுகிறது என்று மந்திரி கக்கன் அவர்களிடத்தில் சொன்னேன். அவர்கள் அதை கேட்டுவிட்டு என்ஜினியரை அழைத்து அந்த இடத்தைப்போய் பார்க்கும்படி சொன்னார்கள். இதுவரையிலும் அந்த என்ஜினியர் அங்கு வந்து பார்க்கவில்லை. அமைச்சர் அவர்கள் சொன்ன வார்த்தைக்கு என்ன மதிப்பு கொடுத்திருக்கிறார்கள் என்பதை நாம் பார்க்கவேண்டும். அதே போல்தான் கனம் பக்தவத்சலம் அவர்களை எடுத்துக்கொண்டால் அவர்களுக்கும் போர்ட் போலியோக்கள் அதிகமாக இருக்கிறது. இவைகளை வைத்துக்கொண்டு அவரால் என்ன நடத்த முடியும் அவர்களுக்கு வயது 60-க்கு மேல் ஆகிவிட்டது. என்.ஜி.ஒக்களுக்கு 55 வயது வரைதான் வேலை பார்க்க முடியும் என்றிருக்கிறது. அப்படி யென்றால் நமது அமைச்சர் அவர்களுக்கு எப்படி இவைகளை எல்லாம் பார்க்க முடியும். அவர்கள் வேண்டுமானால் திறமைசாலியாக இருக்கலாம். ஆனால் எல்லா நிர்வாகத்தையும் சரியாக கவனித்துக்கொள்ள முடியாது. இலாக்காக்களில் பலவிதமான ஊழல்கள் இருப்பதாக இங்கு சொல்லப்பட்டது என்பதை நான் வருத்தத்தோடு சொல்லிக்கொள்கிறேன். என்னை சம்பந்தப்பட்டவரையில் ஒரு விஷயத்தைக் கூறிக்கொள்கிறேன். போலீஸ் நிர்வாகத்தைப்பற்றி எங்கள் அறிஞர் அண்ணா அவர்கள் பேசும் பொழுது குறிப்பிட்டார்கள், எவ்வளவோ தவறுகள் நடைபெறுகின்றன, அவற்றையெல்லாம் இதுவரை ஏன் நீக்கவில்லை என்று கேட்டார்கள். என்பேரில் கேஸ்போட்டு, அதன் பின் நிரபராதி என்று கோர்ட்டு தீர்ப்பு சொன்ன பிறகும் பழைய முறையிலேயே அறிக்கையை வெளியிடுகிறார்கள். அதற்கு பிறகாவது அதைப்பற்றி ஒரு திருத்தம் கூட வெளியிடப்படவில்லை. இவ்விதம் ஒரு திருத்தம் கூட வெளியிடவேண்டாமா என்று கேட்கிறேன். இவ்விதம் இதை திருத்தம் செய்யாமல் என்னைப்பற்றி, ஒரு சட்டசபை அங்கத்தினர் என்கிற முறையில் கேவலமாக போடுவதில் இவர்கள் என்ன பலனை காண்கிறார்கள் என்று கேட்கிறேன். இந்த அரசாங்கம் இவற்றிற்கெல்லாம் பரிகாரம் தேடவேண்டும். எங்களால் முடியாது, நீதிமன்றத்தில் போய் பரிகாரம் தேடிக் கொள்ளுங்கள் என்று சொல்லுவார்களானால் நிச்சயமாக நான் இதற்கு நீதி மன்றத்தில் போய் வழி காணத்தான் செய்வேன் என்பதை இந்த சபையின் மூலமாக தெரிவித்துக்கொள்கிறேன். அமைச்சர் அவர்கள் இதற்கு பரிகாரம் தேடுவார்கள் என்று நம்புகிறேன். ஆகவே இதில் இறுதியான பதிலை அமைச்சர் அவர்கள் தரவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். இந்த கேஸ் காங்கிரஸ்காரர்களால் போடப்பட்டது. இந்த கேஸ் ஹைகோர்டுக்கு அனுப்பப்பட்டு அங்கு நீதிபதி சோமசுந்தரம் அவர்களால் நிரபராதி என்று தீர்ப்பு அளிக்கப்பட்டது. இதில் சம்பந்தப்பட்ட டி.எஸ்.பி. நாராயணன் அவர்கள் இப்போது வேலூரில் இருக்கிறார்கள். அவர் எவ்வளவு ஊழல்கள் செய்துகொண்டிருக்கிறார்கள் என்று அங்குள்ள மக்களுக்கு நன்றாகத் தெரியும். அதையும் கவனிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதேபோல்தான் அக்ரிகல்சர் இன்கம் டாக்ஸ் ஆபீசர் ராயப்பன் என்பவர் ஒரு டி.பி. யில் தங்கியிருக்கும்போது நடந்த நிகழ்ச்சி அரசாங்கத்திற்கு தெரிந்திருக்கும் என்று நம்புகிறேன். அங்கே உள்ளே போய் உடனே காலி செய்யவேண்டும் என்று சொல்லி உள்ளே சென்றிருக்கிறார்கள். இவ்விதம் செய்யக்கூடிய காரியங்கள் எல்லாம் அரசாங்கம் கவனிக்கவேண்டும். இப்பேர்ப்பட்ட நிலைமையெல்லாம் ஏன் ஏற்படுகிறது என்று பார்க்கும்பொழுது இந்த நாட்டில் அரசாங்கம் இருக்கவேண்டிய அவசியமே இல்லையா என்று கேட்க வேண்டியிருக்கிறது. இவைகளை எல்லாம் எடுத்துச் சொன்னால் அமைச்சர்களுக்கு பிடிக்கவில்லை. அது மட்டுமல்ல, கனம் அங்கத்தினர் அம்மையார் போன்றவர்கள் இந்த மாதிரி சொல்லுகிற பைத்தியக்காரர்களை பிடித்து அடைக்க வேண்டும் என்று சொல்லுகிறார்கள். நான் அவர்களுடைய மாவட்டத்தில் நடந்த நிகழ்ச்சிகளை எடுத்தே சொல்லுகிறேன். தேனீயில் நடந்த கலவரத்தில் எங்கள் கட்சி தலைவர் நெடுஞ்செழியன் அவர்கள் மீது பாராங்கல்லைத்

தூக்கி போட்டார்கள், அது மாத்திரமல்ல, மதுரையில் நடந்த கருப்பு சட்டை மகாநாட்டின்போது மகாநாட்டு பந்தலையே கொளுத்தினார்கள். இவ்விதமான செயல்கள் எல்லாம் நடந்திருக்கின்றன. இவைகளை எல்லாம் தடுப்பதற்காகத்தானோ என்னவோ மதுரையில் ஒரு பைத்தியகார ஆஸ்பத்திரியை இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தில் ஆரம்பிக்கவேண்டுமென்று திட்டம் போடப்பட்டிருக்கிறது. இது மாத்திரமல்ல, அமைச்சர்கள் பேசும்பொழுது பொறுப்போடு பேச வேண்டும். அதிலும் சுற்றுப் பிரயாணம் செய்யும்போது மிக பொறுப்பாக பொதுக்கூட்டங்களில் பேச வேண்டும். திராவிட நாடு வேண்டும் என்று கேட்பது "கழுதைக்கு கல்யாணம் செய்து வைப்பது மாதிரிதான்" என்றெல்லாம் பேசியிருக்கிறார்கள்....

**Mr. SPEAKER**: வெளியில் பேசியிருந்தால் அதற்கு இங்கே என்ன செய்ய முடியும். இங்கே அவ்விதம் ஏதாவது பேசியிருந்தால்தான் அங்கத்தினர் சொல்லவேண்டும்.

**Sri A. GOVINDASAMY**: பொது மக்களின் பணத்திலிருந்து செலவு செய்து சுற்றுப்பிரயாணம் செய்யும் அமைச்சர்கள் இவ்விதம் பேசுவது....

**Mr. SPEAKER**: கனம் அங்கத்தினர் அவர்களை நான் கேட்டுக்கொள்வது என்னவென்றால், அமைச்சர்களாக இருந்தாலும் சரி, வேறு யாராக இருந்தாலும் சரி, இங்கு இவ்விதம் ஏதாவது பேசியிருந்தால்தான் அதைப்பற்றி சொல்லவேண்டும். வெளியில் பேசியிருக்கிறார்கள் என்றால் அதற்கு என்னிடம் அத்தாட்சி கிடையாது.

**Sri A. GOVINDASAMY**: இது மாத்திரமல்ல, இங்கு அமைச்சர் அவர்கள் சொன்னார்கள், வெளிநாட்டிலிருந்து இவர்களுக்கு பணம் வருகிறது என்று. இவ்வாறு தவறான குற்றச்சாட்டை சொல்லுகிறார்கள். மேலும் இந்த சபையிலுள்ள அங்கத்தினர்களை கேலி செய்யும் முறையில் நாங்கள் எங்கள் கட்சித்தலைவர் அண்ணா அவர்களை "அறிஞர்" என்று சொல்லும்பொழுது அமைச்சர் அவர்கள் பேசுகின்ற நேரத்தில் "அறிஞர்" என்று கிண்டலாகவும் கேலியாகவும் பேசி வருகிறார்கள். உண்மையிலேயே அவர்களை "அறிஞர்" என்று ஏன் சொல்லுகிறார்கள் என்பதை அறிந்து கொள்ள அமைச்சர் அவர்களுக்கு போதிய திறமை இல்லையா என்று சந்தேகிக்க வேண்டியிருக்கிறது. இவ்விதம் எங்களுடைய மனதை புண்படுத்தும் வகையில் பேசி வருகிறார்கள்.

**Mr. SPEAKER**: கனம் அங்கத்தினர் சொல்வது போல அமைச்சர் அவர்கள் சொல்லவில்லை என்று தெரிவித்துக்கொள்கிறேன். அமைச்சர் அவர்கள் இவ்விதம் சொன்னார் என்று சொன்னால், அந்த சமயத்தில் சபாநாயகர் தனது வேலையை சரியாக செய்யவில்லை என்று ஆகிறது. . .

**Sri A. GOVINDASAMY**: கனம் சுப்பிரமணியம் அவர்களேதான் இவ்விதம் பேசவில்லை என்று சொன்னால் போதும். . . . . . .

**Mr. SPEAKER**: கனம் சுப்பிரமணியம் அவர்களுக்கு இதில் பொறுப்பு இல்லை. இதைப்பற்றியுள்ள பொறுப்பு சபாநாயகருக்குத்தான். இந்த சபையில் மந்திரி அவர்கள் இவ்விதம் சொல்லவில்லை.

**Sri A. GOVINDASAMY**: இந்த சபையில் வைத்தே, இவர்கள் எல்லாம் சபையில் வந்து படிக்காமல், புள்ளி விவரங்கள் இல்லாமல் பேசுகிறார்கள் என்று சொல்லியிருக்கிறார்கள். நண்பர் அண்ணாமலை அவர்கள் புள்ளி விவரத்திலுள்ள ஒரு தவறை எடுத்துக் காட்டியபோது நூறு ரூபாய் தானே என்று சொல்லிவிட்டார்கள். ஆடிட் செய்வதில் ஒரு பைஸா தவறாக இருந்தால் கூட யாரையும் விடமாட்டார்கள். சிலவற்றில் ஆடிட் செய்யப்பட்டிருப்பதாகவே குறிப்பிடப்படவில்லை. கவர்னர் அவர்களுடைய "சம்ப்யூரி" செலவு என்பதில் "**The expenditure from the allowance is subject to audit**" என்று போடப்பட்டிருக்கிறது. இன்னொரு **contract allowance** என்கிற செலவு இனத்தில் **The expenditure is not sufficient**

1st April 1958] [Sri A. Govindasamy]

**to audit** என்று சொல்லப்பட்டிருக்கிறது. என் இதிலே இவ்வளவு செலவாகிறது என்பதை எல்லாம் கணக்குப் பார்க்க வேண்டாமா? ஒன்றை ஆடிட் செய்வானேன், ஒன்றை ஆடிட் செய்யாமல் விடுவானேன்? அமைச்சரிடத்தில் இந்த டிபார்ட்டுமெண்டுகளின் தவறை சுட்டிக்காட்டினால் தனிப்பட்ட வெறுப்போடு பேசுவதாகக் கருதக்கூடாது. எங்களுடைய கருத்துக்களை இலாக்காவிற்கு அனுப்பி வேண்டியதைச் செய்வதற்காகத் தான் இங்கே கருத்துகளை சொல்லுகிறேம்.

**MR. SPEAKER:** கனம் மந்திரி அவர்கள் சிதம்பரத்தில் நடந்த சம்பவத்தைப் பற்றி ஒரு ஸ்டேட்மெண்ட் கொடுக்கவேண்டும், அதற்கு 15 நிமிஷம் வேண்டுமென்று சொல்லுகிறார்கள். 5 நிமிஷம் போது மென்றால் ஸ்ரீ வி. கே. கோதண்டராமன் அவர்கள் பேசலாம். இல்லை யென்றால் ஸ்ரீ வி. கே. ராமசுவாமி முதலியார் அவர்களைக் கூப்பிடு கிறேன்.

***SRI V. K. RAMASWAMY MUDALIYAR:** கனம் சபாநாயகர் அவர்களே, இந்த வெட்டுப் பிரேரணையை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். முதன் முதலாக நம்முடைய ராஜ்யத்தில் தற்போது நடை பெற்று வரும் நிர்வாகத்தைப் பற்றி குறிப்பிட விரும்புகிறேன். பொதுவாக, இந்த மந்திரி சபை பதவி ஏற்றதிலிருந்து, அநேக இலாக்காக் களில் பலவித ஊழல்கள் ஏற்பட்டு, மக்களுக்கு அதிருப்தி ஏற் பட்டிருக்கிறது. பல துறைகளில் அதிருப்தி ஏற்பட்டிருக்கிறது. அதிலும் சமீபத்தில் கொஞ்ச நாட்களாக விலைவாசிகள் ஏறிக்கொண்டு போய் மக்கள் கஷ்டப்படுகிறார்கள். பொருளாதார நிலைமை மிகவும் மோசமாகயிருக்கிறது. அவர்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்து வதாகச் சொல்லும் அரசாங்கம், அவர்களுடைய வாழ்க்கைத் தரத்தை குறைத்துக்கொண்டே போகிறது. மக்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். இதற்கு, டில்லி சர்க்கார் நம் தமிழ் நாட்டை ரொம்பவும் புறக்கணித்து நமக்கு வேண்டிய உதவிகளைக் கொடுக்காதது முக்கிய காரணம். வட நாட்டிலே அநேகவிதமான திட்டங்களைப் போட்டு ஏராளமான பணத்தை செலவழிக்கிறார்கள். தென்னாட்டில் அத்தகைய திட்டங்கள் ஒன்றும் இல்லை. அவர்கள் கொடுக்கும் பணமும் ரொம்பக் குறைவாகயிருக்கிறது. ஆனால் நம்முடைய நாட்டிலிருந்து ஏராளமான வரிப்பணம் அங்கே போகின்றது. அப்படியிருந்தும் நம்முடைய மாகாண சர்க்கார் டில்லி சர்க்காரை சரிவரக் கண்டித்துக் கேட்காததன் காரணமோ, வேறு என்ன காரணமோ, நமக்குப் போதுமான பணம் கிடைப்பதில்லை. அதனால் இந்தப் பிராந்தியத் தில் தொழில்கள் அதிமகாக விருத்தியாகி மக்களுக்குப் போதுமான தொழில் வாய்ப்பு ஏற்படவில்லை. நேற்று கூட பேப்பரில் பார்த்தேன். மத்திய சர்க்கார் உள் நாட்டு மந்திரி அவர்கள் ராஜஸ்தான் போய் சுமார் 465 மைல் நீளமுள்ள ஒரு கால்வாய்க்கு அஸ்திவாரம் போட்டிருக்கிறார் கள். ஆனால் நமக்குள்ள பிரச்னை என்னவென்றால், கங்கை நதியை இங்கே கொண்டு வரப்போகிறேம், கோதாவரி, கிருஷ்ணா நதிகள் எல்லாம் இங்கு வரப்போகிறது என்று சொல்லுகிறார்களே யொழிய, ஆந்திர சர்க்கார் அந்த கோதாவரி, கிருஷ்ணா ஜலத்தை நமக்கு எப்பொழுது கொடுப்பார்கள், அதற்கு மத்திய சர்க்கார் என்ன உதவி செய்யப்போகிறார் கள் என்பதையெல்லாம் பற்றி யோசிக்கவேண்டும். நம்முடைய தென் னாட்டில் அநேக வருஷங்காளக பஞ்சம் இருந்து வந்தபோதிலும், நமக்கு போதுமான நீர்ப்பாசன வசதியை மத்திய சர்க்கார் அளிக்காமல் இருக்கிறார்கள். ராஜஸ்தான் முதலிய இடங்களில் கால்வாய் வெட்டுவதை நான் ஆட்சேபிக்கவில்லை. நமக்கு அவர்கள் நீர்ப்பாசன வசதியை அதிகரி க்க முயல வேண்டும். ஆகவே மத்திய சர்க்கார் முன்வந்து ஆந்திராவிலி ருந்து நமக்கு வரவேண்டிய ஜலத்தையும், கேரள ராஜ்யத்திலிருந்து பரம்பிக்குளத் திட்டத்திற்காக வரவேண்டிய ஜலத்தையும் கொண்டுவர சீக்கிரமாக முயற்சி எடுத்துக் கொள்ளவேண்டும். அதற்கு நம்முடைய அமைச்சர்கள் போதுமான ஊக்கம் எடுத்துக்கொண்டு காரியங்கள் செய்ய வில்லை என்பதைப் பற்றி வருத்தப் பட வேண்டியவர்களாக இருக்கிறேம். தவிர, அங்கே நமக்காக சண்டை போட்டு, இவைகளை எல்லாம்

[Sri V. K. Ramaswamy Mudaliyar] [1st April 1958

வாங்குவதற்கு போதுமான அமைச்சர்கள் இல்லை. பொதுவாகப் பார்க்கப் போனால், மத்திய சர்க்காரில் உ.பி. ஐச் சேர்ந்த 6 மந்திரிகளும், பம்பாயிலிருந்து 5 மந்திரிகளும் இருக்கிறார்கள். சென்னை ராஜ்யத்தைச் சேர்ந்த ஒரே ஒரு டெபுடி மந்திரிதான் இருக்கிறார். நம்முடைய ராஜ்யத்திலிருந்து அதிக மந்திரிகளை எடுக்காதது நமக்கு எல்லாம் வருத்தமாகத் தானிருக்கிறது. மத்திய சர்க்கார் நம்மை ரொம்பவும் புறக்கணித்து, போதுமான பணத்தை ஒதுக்காமல் இருக்கிறார்கள். இதை நம்முடைய மந்திரி சபை அவர்களுக்கு எடுத்துச் சொல்லி, இந்த வருஷத்திலிருந்தாவது போதுமான பணத்தைத் தரவேண்டுமென்றுதான் கேட்டுக் கொள்கிறேன். ஆனால் மத்திய சர்க்கார் ஒரு நிதிக் கமிஷனைப் போட்டார்கள். இவ்விடத்திலுள்ளவரை, அதற்கு முன்பு டெபுடி மந்திரியாக இருந்த ஒருவரை நியமத்திருந்தார்கள். ஆனால் அவர் செய்த சிபார்சிலிருந்து நமக்குப் போதுமான பண வசதி கிடைக்கவில்லை. அவர் அங்கிருந்து வெளியேறிய பிறகு மத்திய சர்க்கார் இன்னும் அதிகமாக நமக்குப் பணம் கொடுக்கலாமென்று சொல்லுகிறார். இம்மாதிரி கமிஷன் போடுவதாக இருந்தால் ஒவ்வொரு மாகாணத்திலிருந்தும் ஒரு நிதி அமைச்சரை போட்டு, சுப்ரீம் கோர்ட் நீதிபதி ஒருவரையும் போட்டால் நல்ல முறையில் நடக்கும். வேண்டிய கட்சிக்காரரையோ, வேண்டியவரையோ போடுவதன் காரணமாக, சில மாகாணங்கள் அநேக விதத்தில் புறக்கணிக்கப்பட்டு வருவதை நாம் பார்க்கிறோம்.

அடுத்தபடியாக, நம்முடைய ராஜ்யத்திலுள்ள அமைச்சர்கள் சம்பளங்களைப்பற்றியும் இன்னும் பல விஷயங்களைப்பற்றியும் அங்கத்தினர்கள் பேசினார்கள். நான் முன்பே சொல்லியிருக்கிறேன். இப்பொழுதும் சொல்லுகிறேன். அமைச்சர்களுக்கு இந்த சம்பளம் கொடுப்பதைப்பற்றி என்னைப் பொருத்தவரையில் நான் ஆட்சேபணை செய்யவில்லை. சம்பளம் போதவில்லையென்று சொன்னால் மேற்கொண்டு கூட பெற்றுக்கொள்ளலாம். ஆனால் அவர்களுக்கு கொடுக்கப்படும் **"perquisites"** ஐப் பொறுத்தவரையில், அவர்களுடைய கார்களை அவர்களே வாங்கிக்கொள்ள வேண்டும், இன்னும் செலுத்த வேண்டிய வரிகளை எல்லாம் அவர்களே கொடுக்க வேண்டும். இம்மாதிரியான செலவுகளை அவர்களுடைய சம்பளத்திலிருந்து போட்டுக்கொள்வார்களேயானால் இந்த சம்பளம் அதிகமில்லையென்று'தான் சொல்ல விரும்புகிறேன். அவர்களுடைய சுற்றுப் பிரயாணத்தைப்பற்றி அநேக அங்கத்தினர்கள் பேசினார்கள். இது சம்பந்தமாக நான் இரண்டொரு வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். அடிக்கடி ஒரு ஜில்லாவிற்கு ஒரு அமைச்சரோ, மற்றொரு அமைச்சரோ போவதன் காரணமாக செலவு அதிகமாவதோடு, சிப்பந்திகளின் வேலையெல்லாம் தடைப்பட்டு, கால தாமதம் ஏற்பட்டு, மக்களுக்கு கஷ்டம் உண்டாகிறது.

12-20 p.m. இதைப்பற்றி இன்னும் சொன்னேன். நேற்றும் சொன்னேன். அமைச்சர்கள் வெளியே செல்வதால் அநேக ஆபீசர்கள் கூட இருக்க வேண்டியதாய் இருக்கிறது. முக்கியமாக போலீசார் ஏராளமான பேர் போக வேண்டியிருக்கிறது. பந்தோபஸ்திற்காக ஏராளமான போலீசார் போகவேண்டியிருக்கிறது. அமைச்சர்களுக்கு மக்களுடன் தொடர்பு இருக்குமானால் அதிலும் நல்ல முறையில் ஆட்சி செய்துவந்தால் பந்தோபஸ்து வேண்டிய நிலைமை வராது. உடனே பந்தோபஸ்தை குறைக்க வேண்டும்.

இவர்கள் சுற்றுப்பிரயாணம் செய்யும்போது எதிர்கட்சியைச் சேர்ந்தவர்களோ அல்லது கட்சி பேதம் இல்லாதவர்களோ கூட்டத்திற்கு சென்று சீட்டு கொடுத்து அனுப்பினாலும், கேள்வி கேட்க முயற்சித்தாலும் போலீசார் அடக்குமுறையின் காரணமாக அவர்களை வேறு இடத்துக்கு அழைத்துக்கொண்டுபோய் துன்புறுத்துகிறார்கள் என்று எனக்கு அநேக புகார்கள் வந்துகொண்டிருக்கின்றன. இவைகளை தவிப்பதற்கு அமைச்சர்கள் முன் வரவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். ஒவ்வொருவருடைய குறைகளையும் விசாரித்து ஆவன செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதேமாதிரிதான் கலெக்டர்களும் மற்ற இலாகாவைச் சேர்ந்தவர்களும்.

1st April 1958] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

இவர்கள் அடிக்கடி சுற்றுப் பிரயாணம் செய்வதால் சிப்பந்திகள் வேலை கெடுகிறது. முக்கியமாக செங்கல்பட்டு ஜில்லா கலெக்டரை குறிப்பிடவேண்டும். மீனம்பாக்கம் **Aerodrome** க்கு மத்திய சர்க்கார் அமைச்சர்களும், டெபுடி அமைச்சர்களும் மற்ற வெளி நாட்டு அமைச்சர்கள் வருவதன் காரணமாக அவர் வேலை ரொம்பவும் கெடுகிறது, ஆபீஸ் பேப்பர்கள் டிலே **(Papers delay)** ஆகிறது.

சில சமயங்களில் இரண்டு ஜில்லா கலெக்டர்களும், போலீஸ் அதிகாரிகளும் வருகிறார்கள். இது அவசியம்தானா என்பதை யோசிக்கவேண்டும். இந்த பந்தோபஸ்து விஷயம் பூராவும் சென்னை போலீசாரிடமும் சென்னை கலெக்டரிடமும் ஒப்படைக்கலாம் என்பதுதான் என்னுடைய அபிப்பிராயம். இதைப்பற்றி சட்ட சபையில் முன்பு கூடச் சொன்னேன். அப்பொழுது அமைச்சர் இந்த விஷயம் பரிசீலனையில் இருப்பதாகச் சொன்னார்கள். அது எந்த கட்டத்தில் இருக்கிறது என்பதைப்பற்றி அமைச்சர் சொல்லவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். **(National Extension Community Development)** (தேசீய விஸ்தரிப்பு, சமுதாய நல திட்டங்கள் இப்பொழுது அநேக இடங்களில் சரிவர நடப்பதில்லை. அதற்கு முக்கியமாய் **(delay)** டிலே தான் காரணம். வேலை செய்கிறவர்களுக்கு சரியாக பணம் வருவதில்லை. எனக்கு இதைப்பற்றி பல புகார்கள் சொன்னார்கள் கலெக்டர் உத்தரவு செய்து என்ஜினியரிங் டிபார்ட்டுமென்ட் வழியாக வேலை செய்தவர்களுக்கு பணம் வாங்குவதில் பலவிதமான கஷ்டங்கள் இருக்கின்றன. தாசில்தார், சப்-கலெக்டர் முதலிய அதிகாரிகள் இருப்பதினால் **(delay)** ஆகிறது. இவ்வளவு காலதாமதம் ஏற்பட்டால் வேலைகளை எடுத்துச் செய்வதற்கு யார் முன் வருவார்கள். இங்கு வேலைகள் நல்ல முறையில் நடக்க வேண்டுமானால் அங்கு இருக்கும் மக்களை உற்சாகப்படுத்தி, செய்த வேலைகளுக்கு பணம் சீக்கிரம் கிடைக்கும்படி சர்க்கார் ஏற்பாடு செய்ய வேண்டும்.

சிக்கன முறைகளைப்பற்றி நான் அநேக முறைகள் சொல்லியிருக்கிறேன். ஆந்திரா சர்க்கார் பல கமிட்டிகளைப் போட்டு இதைப் பரிசீலனை செய்தார்கள். நம்முடைய மாகாணத்திலும் ஒரு ஆபீசர் பரிசீலனை செய்து வருவதாகவும் அவருடைய முடிவுகளை இந்த சபையின் முன் சமர்ப்பிக்கப் போவதாகவும் அமைச்சர் சொன்னார்கள். அது எப்பொழுது சபையில் சமர்ப்பிக்கப்படும் என்று அமைச்சர் திட்டமாகச் சொல்லவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

நமது மாகாணம் பிரிந்து போனபிறகும் ரெவினியூ போர்டில் 3 மெம்பர்கள் இருக்கவேண்டுமா என்பதைப்பற்றி நாம் நன்றாக யோசிக்க வேண்டும். கொஞ்ச காலத்திற்கு முன் காங்கிரஸில் இருந்தவர்களும் கூட ரெவினியூ போர்டு அவசியம் இல்லை என்று சொன்னார்கள். இதை எடுத்துவிடவேண்டுமா அல்லது நல்ல முறையில் வேலை செய்வதற்கு எப்படி திருத்தி அமைக்கலாம் என்று நாம் நன்றாக யோசனை செய்ய வேண்டும். ரெவினியூ போர்டு இருந்தாலும் இப்பொழுது இருக்கும் அளவு ஆபீசர்கள் இருக்கவேண்டுமா என்பது பற்றி யோசிக்க வேண்டும்.

இன்னும் பல சிக்கன முறைகளை நாம் கையாளலாம். உதாரணமாக சென்னை கலெக்டரை எடுத்துக்கொள்வோம். **Superintendent of Stationery** என்று தனியாக ஒரு **I.A.S.** ஆபீசரை நியமித்த பிறகும் தனியாக கலெக்டருக்கு வேலை இருக்கிறதா என்று பார்க்க வேண்டும். **Accommodation Controller** வேலையையும் அவருக்கு கொடுக்க முடியாதா என்று பார்க்க வேண்டும். அல்லது ஒரு டெபுடி கலெக்டரை போட்டால் போதுமா என்று பார்க்க வேண்டும். இம்மாதிரியான விஷயங்களை நன்றாகப் பரிசீலனை செய்ய வேண்டும். ஜில்லாக்களுக்கு சீனியர் கலெக்டர்கள் இல்லாமல் இருக்கும் நிலையில் இந்த விஷயங்களை கவனிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

பழைய காலத்தில் சட்ட சபை கௌன்சில் இருந்தபோது **Finance Committee** நிதி கமிட்டி என்று ஒன்று போட்டிருந்தார்கள். அந்த **Finance Committee** இப்பொழுது அமைச்சர்கள் கொண்ட குழுவாக

[Sri V. K. Ramaswamy Mudaliyar] [1st April 1958

இயங்கி வருகிறது. இந்த Finance Committee-யில் சில சட்டசபை அங்கத்தினர்களேயும் போட்டு அமைக்கலாம் என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். அதனுடைய குறிப்பில் இம்மாதிரி சொல்லப்பட்டிருக்கிறது.

'The Finance Committee constituted in pursuance of the resolution passed by the Council then was intended to scrutinise the proposals for new expenditure and to advise whether they should be accepted as suitable for entry in the next budget or in cases in which the expenditure is urgently required, whether a supplementary estimate should be moved, Estimates Committee, Public Accounts Committee என்று இருந்தபோதிலும், இந்த Finance Committee யில் சட்டசபை அங்கத்தினர்களைப் போட்டு, எல்லோரும் சேர்ந்து அமைச்சர்களுக்கு உதவி புரியும்படியான ஒரு நிலைமையை ஏற்படுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அமைச்சர்களை இன்னும் அதிகமாக போட வேண்டும் என்று கனம் ஆசைத்தம்பி அவர்கள் சொன்னார்கள். ஒரு second line of defence வேண்டும் என்று நானும் நினைக்கிறேன். நம்முடைய நிதி அமைச்சரோ அல்லது வேறு அமைச்சரோ மத்திய சர்க்காருக்கு போகும்படியான சந்தர்ப்பம் ஏற்பட்டால், அது பெருமைப்படக்கூடிய விஷயமாக இருந்தாலும், அவருக்கு பதிலாக வரக்கூடியவர் அரசாங்க விஷயத்தில் தேர்ச்சி பெற்றவராக இருக்க வேண்டுமே என்கிற அச்சம் ஒரு பக்கத்தில் இருக்கிறது. அதற்காக second line of defence என்கிற முறையில் அதிகமான அமைச்சர்களையோ அல்லது டெபுடி அமைச்சர்களையோ நியமித்து ஒவ்வொரு அமைச்சருக்கும் இருக்கக்கூடிய இலாக்காக்களை நல்ல முறையில் பரிபாலனம் செய்யும்படி ஏற்பாடு செய்வதற்கு யோசிக்க வேண்டும். இதைப்பற்றி முதல் அமைச்சரிடத்தில் சட்டசபையின் மூலமாக முன்பு தெரிவித்திருக்கிறேன்.

மக்களுடன் தொடர்பு இல்லாமல் அதிக வேலைகளை வைத்துக்கொண்டு ஜில்லா வாரியாக சுற்றுப் பிரயாணம் செய்யும்போது மக்களுக்கு மிகவும் அதிருப்தி ஏற்படுகிறது. இப்பொழுது லஞ்சம் அதிகமாக இருந்துகொண்டிருக்கிறது. ஆபிஸுகளில் பேபர்கள் delay தாமதம் ஆகின்றன. இப்படியே போய்க்கொண்டிருந்தால் நம்முடைய அரசாங்கம் க்ஷீண திசையை அடையும் என்று சொல்ல வேண்டியதாய் இருக்கிறது.

வெளியில் நடக்கும் கலவரங்களைப்பற்றி சொன்னார்கள். அம்மையார் அவர்களும் கலவரங்கள் நடைபெற்றதைப்பற்றி சொன்னார். பல இடங்களுக்கு மந்திரிகள் போவதால் அங்கு போலீஸ்காரர்கள் போவதாக இருப்பதால் கலவரங்கள் ஏற்படுகிறது. போலீஸ்காரர்களை அங்கே கொண்டு போய் வைப்பதால்தான் கலவரங்கள் ஏற்படுகின்றன. அதுதான் அதற்குக் காரணம் என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். போலீஸ்காரர்கள் சில இடங்களில் மனம் போன போக்குப்படி நடந்து கொள்ளுகிறார்கள். அவைகள் சர்க்காருக்கு தெரிவது இல்லை. அவர்கள் அநேகம் அக்கிரமங்கள் செய்துவருகிறார்கள்.

முக்கியமாக இப்பொழுது சமீபத்தில் அநேகம் இடங்களில் பார்த்தால் நியூஸ் பிரின்ட் சென்ஸார்ஷிப் நடக்கிறது. எங்களுடைய ஆபீசுக்கு நாள் ஒன்றுக்கு சுமார் 60–70 லெட்டர்கள் வருகின்றன. அப்படி வரக்கூடிய எல்லா லெட்டர்களும் பிரித்துப் பார்த்து ஒட்டி சென்ஸார் செய்யப்பட்டு வருகிறது இப்பேர்ப்பட்ட அக்கிரமங்கள் நடைபெற்று வருகின்றன. அப்படிச் செய்ய வேண்டிய அவசியம் என்ன? இதைப் போலீஸ்காரர்கள் செய்வது அவர்களாகவே செய்கின்றார்களா அல்லது சர்க்கார் செய்யச் சொல்லி செய்கிறார்களா என்பது தெரியவில்லை. பெரிய செயல்களை ஒன்றும் நாங்கள் செய்துவிடவில்லை. அவர்கள் பார்த்து அனுப்புவதால் ஒன்றும் வந்துவிடப்போவது இல்லை. இப்படிச் செய்வதற்கு மந்திரிகள் உத்தரவு போட்டு அப்படிச் செய்கிறார்களா அல்லது அவர்களாகவே செய்கிறார்களா என்பதுதான் தெரியவில்லை. இதைப் பற்றி கனம் மந்திரி அவர்கள் யோசிக்க வேண்டும். இதைப்பற்றி நாங்கள் பிரத்தியேகமாக

1st April 1958] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

எழுதி அனுப்பத் தயாராக இருக்கிறோம். இப்படி ஒவ்வொரு லெட்டரும் சென்ஸார் செய்யப்பட்டு வருகிறது. ஆனால் அவைகளில் சமாச்சாரம் ஒன்றும் இல்லை. இதை இப்படி செய்வதோடல்லாமல் எங்களுக்கு வரும் டெலிபோன்களும் tap செய்யப்பட்டு வருகிறது. இதைப் பார்த்தாலும் ரொம்பவும் கேவலமாக இருக்கிறது. இப்படிப்பட்ட விஷயங்களைப் பார்த்தால் ரொம்பவும் கேவலமாக இருக்கிறது. இவைகளைப் பற்றி பிரத்யேகமாக எழுதி அனுப்புவதாக இருக்கிறோம். அதைப்பற்றி இந்த மந்திரி சபை பரிசீலனை செய்து அதற்கு வேண்டிய நடவடிக்கைகளையும் எடுத்துக் கொள்ளவேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன். இதுதான் என்னுடைய முக்கியமான அபிப்பிராயங்கள். சர்வகலாசாலையைப்பற்றி இங்கே பேசப்பட்டது. அண்ணாமலை சர்வகலாசாலையில் நடந்ததைப் பற்றி ஒரு ஸ்டேட்மெண்ட் கொடுக்கப்போவதாக அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். இருந்தபோதிலும் போலீஸ்காரர்களின் அடக்குமுறையினால்தான் இப்படியெல்லாம் நடைபெறுகின்றன என்று சிலர் சொல்லுகிறார்கள். இம்மாதிரி போலீஸ்காரர்கள் நடக்காமல் நல்ல முறையில் நடந்து கொள்ளவேண்டும். அவர்கள் மக்களுடன் தொடர்பு வைத்துக்கொண்டு நல்ல முறையில் நடக்கவேண்டும். அந்த முறையில் ஆட்சி செய்யாவிட்டால் கஷ்டங்களுக்கு உள்ளாக வேண்டியதுதான். சமீபத்தில் இந்தூரில் நடந்த பை-எலெக்ஷன் (உப-தேர்தல்) காரணமாக காங்கிரசுக்கு எவ்வளவு செல்வாக்கு இருந்து வருகிறது என்பது தெரியவரும். அதைப்பற்றி நாங்கள் இவ்விடம் எடுத்துச்சொல்ல வேண்டியது இல்லை. ஆகையால் நாங்கள் சொன்ன சில யோசனைகளை எடுத்துக்கொண்டு, அவைகளை நன்றாக கவனித்து ஆவன செய்ய வேண்டும் என்று கனம் மந்திரி அவர்களைப் கேட்டுக்கொண்டு என்னுடைய பேச்சை முடித்துக் கொள்ளுகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: கனம் சபாநாயகர் அவர்களே, இங்கே நடைபெற்ற விவாதத்திற்கு பதில் சொல்வதில் சில கஷ்டங்கள் இருக்கின்றன என்பதைப்பற்றி விவாதத்தின்போதே நான் எடுத்துச் சொன்னேன். இந்த விவாதம் ஒரு குறிப்பிட்ட மானியத்தின் மீது நடக்கக்கூடிய விவாதம். இதில் மந்திரிகளைப்பற்றி இந்த மானியத்தில் குறிப்பிட்டிருந்தாலும்கூட பொதுவாக இருக்கக்கூடிய கொள்கைகளைப்பற்றி இந்த விவாதத்தில் நாம் முக்கியமாக அடங்கி இருக்கக் கூடிய கொள்கைகளைப் பற்றி குறிப்பிட்டிருந்தால் அவைகளுக்கு பதில் சொல்வதற்கும் ஓரளவு சுலபமாக இருந்திருக்கும். ஆனால் பல்வேறு இலாகாக்களில் இருக்கக்கூடிய, அவைகள் முக்கியமான விஷயங்களாக இருக்கலாம், முக்கியமான விஷயங்களை இங்கே எடுத்துச் சொன்னதற்கு உடனடியாக பதில் சொல்ல முடியும் என்று எதிர்பார்ப்பது சரியல்ல என்பதை நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஆகவே பதில் சொல்லும் போது முக்கியமாக இந்த மான்யத்தின் அடிப்படையில் இருக்கக்கூடிய சில விஷயங்களைப் பற்றி மட்டும் பதில் சொல்லிவிட்டு மற்ற முக்கியமான விஷயங்களுக்கு, அவைகள் எப்பொழுது முக்கியமான விஷயங்கள், அதற்கு பதில் சொல்ல வேண்டும் என்ற காலம் வருமோ அப்பொழுது அதற்கு சரியான பதில் சொல்ல முடியும். அதற்கு ஏற்ற அந்தக் காலத்தில் பதில் கிடைக்கும் என்பதையும் தெரிவித்துக்கொள்ளுகிறேன். 12-35 p.m.

முதல் முதலில் இருக்கக்கூடியது ஹெட்ஸ் அப் ஸ்டேட்ஸ், அதாவது கவர்னருடைய மானியம். கவர்னருடைய பதவி அவசியமா இல்லையா என்பதைப்பற்றி இப்பொழுது சொல்லக்கூடிய அபிப்பிராய பேதம் இல்லை, பல வருஷங்களாகவே இந்த சபையில் இதைப் பற்றி மாறுபட்ட கருத்துகள் எடுத்துச் சொல்லப்பட்டு வருகின்றன என்பதை நாம் எல்லோரும் அறிவோம். இப்படிப்பட்ட மாறுபட்ட கருத்து இப்பொழுது ஏற்பட்டது அல்ல. அரசியல் சட்டம் இயற்றிய காலத்திலேயே கவர்னர் பதவி அவசியமா, அவசியம் இல்லையா என்ற கருத்துக்கள் இருந்தன. கவர்னர் பதவி அவசியமானால் கவர்னர்களை நியமிக்கபட வேண்டுமா அல்லது தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமா என்பதைப்பற்றிய பெரிய சர்ச்சை இருந்தது என்பதை கனம் அங்கத்தினர்கள் அறிந்திருப்பார்கள் என்றே நம்பு

கிறேன். அப்பொழுதே இது சர்ச்சைக்கு உள்பட்ட விஷயம் என்றே ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். அரசியல் அமைப்பு எப்படி இருக்க வேண்டும் என்பதிலும் பலவேறு கருத்துக்கள் அதில் இருக்கின்றன. கடைசியாக இதைப் பற்றி எல்லோரும் ஆலோசனை செய்துபார்த்து அரசியல் அமைப்பு எப்படி இருக்கவேண்டும் என்கிற ஒரு முடிவுக்கு வந்து அந்தச் சட்டத்தை இயற்றியிருக்கிறார்கள். இதையே திருப்பித் திருப்பி சொல்லிக்கொண்டுவந்து அது வேறு விதமாக இருக்கலாம் என்று சொல்லிக்கொண்டுவருவதால் எந்த விதமான பலனும் ஏற் படப்போவதில்லை என்பதைத்தான் நான் தெரிவித்துக்கொள்ள விரும்பு கிறேன்.

கவர்னர் ஒரு பக்கம் இருக்கட்டும், இம்மாதிரியான ஒரு அசெம்பளி இருக்க வேண்டுமா அல்லது வேண்டாமா என்பதைப் பற்றியும் இரண் டாவது சபை அவசியமா என்பதைப் பற்றியும் மாறுபட்ட கருத்துக்கள் இருக்கின்றன. கவர்னரைப்பற்றி பேசும்போது அவருக்கு இவ்வளவு பணம் செலவழிக்க வேண்டுமா என்பதைப் பற்றி எடுத்துச் சொல்லு கிறார்கள். அதைப்போலவே பல நிபுணர்கள் இப்படிப் பட்ட சபை அவசியம் இல்லை, இதற்கு இவ்வளவு செலவு செய்யவேண்டுமா, இதற்கு எதற் காக இவ்வளவு செலவு செய்கிறார்கள் என்றெல்லாம் சில நிபுணர்கள் கேட்கிறார்கள். இதனால் என்ன பலன் ஏற்படுகிறது என்றும் சொல்லு கிறார்கள். இதனால் எவ்வளவு செலவு ஏற்படுகிறது. ஒரு வருஷத்திற்கு ஒரு தடவை கூடினால் போதாதா, ரஷியாவில் கூடுவது போல் என்றுகூட, சொல்லுகிறார்கள். அரசியல் அமைப்பு என்று சொல்லும்போது பல விதமான விஷயங்களை வைத்துக்கொள்ளலாம். பலவேறு கருத்துக்கள் கிடைக்கிறது. அதைப்பற்றி ஆலோசனை செய்து ஒரு முடிவுக்கு வந்த பிறகு அது நல்ல முறையில் நடப்பதற்கு நாம் நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டுமே தவிர அதைப் பற்றி திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருப்பதில் அர்த்தம் இல்லை. ஏற்கனெவே முடிவு செய்ததைப் பற்றி திருப்பித் திருப்பி ஒவ்வொரு தடவையும் சொல்லிக்கொண்டே இருப்பதில் பலன் இருக்கப்போவதில்லை. முக்கியமாக திராவிட முன்னேற்ற கழக அங்கத்தினர்களும் கருத்து வேறுபாடு உள்ள அங்கத்தினர்களும் சொல்லிக்கொண்டு வருகிறார்கள், கவர்னர் பதவி இல்லாமலேயே கூட நடக்கலாம் என்று. நாம் எல்லோரும் யோசித்து ஒப்புக்கொண்ட பிறகு அதை ஏற்றுக்கொள்ள வேண்டியதுதான். இப்படிப்பட்ட கட்சி அரசாங்கம் நடக்கும்போது இப்படிப்பட்ட கவர்னர் பதவி இருக்க வேண்டியது அவசியம் என்று இப்படி ஏற்பாடு செய்திருக்கிறார்கள். கட்சி அரசாங்கம் நடக்கும் போது கவர்னர் என்ற ஒரு பொதுப்படையானவர் இல்லாவிட்டால் அந்தக் கட்சியின் முதல் மந்திரிதான் எல்லாவற்றையும் பார்க்க வேண்டிய தாக இருக்கும். முதல் மந்திரி அந்த வேலைகளைப் பார்க்கும்போது, அவர் கட்சிக்கு தலைவராக இருக்கும்போது அவரிடத்தில் எப்படி எல்லா விஷ யங்களையும் சொல்ல முடியும். அப்படி எடுத்துச் சொல்லக் கூடிய நிலை மை இருக்காது என்பதற்காகத்தான் பொதுப்படையான ஒருவரை வைத்திருக்கிறார்கள். கட்சி சார்பற்றவரையும் பொதுவாக இருக்கக் கூடிய ஒரு பதவி இருக்க வேண்டியது அவசியம் என்றும் கருதி இப்படிப் பட்ட நிர்வாகத்திற்கு ஒரு கவர்னர் அவசியம் என்று ஏற்பாடு செய்யப்பட் டிருக்கிறது. மக்களுக்கு ஒரு தலைவர் என்று ஒன்றை வைத்துக்கொண் டால்தான் மக்கள் அதை புரிந்துகொள்ள முடியும். அதற்கு ஒரு உதாரணம் சொல்லலாம். கல்லை வைத்து அதை தெய்வம் என்று கொண்டாட வேண்டும் என்று சொல்லுகிறார்கள். ஆனால் அந்தக் கல்லு தெய்வம் அல்ல. கல்லு கடவுளுக்கு பிரதிநிதியாக கோவிலில் வைக்கப் பட்டிருக்கிறது. அதைக் கடவுள் என்று பாவித்து அதை வணங்கி வருகி றார்கள். கல்லை வைத்துக்கொண்டு அது தெய்வத்தின் பிரதிநிதி என்று நினைத்துக்கொண்டு அதை எப்படி வணங்குகிறார்களோ அதே மாதிரி தான் பொது மக்கள் இப்படிப்பட்ட ஒரு பிரதிநிதியை வைத்துக்கொண்டு அவர் அவர்களுக்கு தலைவர் என்று வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அப்படி அவரை வைத்துக்கொண்டு மற்ற காரியங்களைச் செய்யவேண்டிய தாக இருக்கிறது. கடவுள் இருக்கிறார் என்று சொன்னால் அதை நம்பக்

1st April 1958] [Sri C. Subramaniam]

கூடியவர்கள் கல்லை கடவுள் என்று நம்புகிறார்கள். அதை நம்பாதவர்கள் அது வேண்டியது அவசியம் இல்லை என்று சொல்லுகிறார்கள். சாதாரணமாக கல்லை வைத்து அதை தெய்வம் என்று கொண்டாடுகிறவர்களுக்கு அது ஒரு சின்னமாக இருக்கிறது. அதை வைத்துக்கொண்டு அதற்கு என்று பல காரியங்களைச் செய்து வருவதை நாம் பார்க்கிறோம். அதைப்போலவேதான் பெருவாரியாக இருக்கக் கூடிய மக்களுக்கு சாசுவதமாக, நிரந்தரமாக ஒரு தலைவர் இருக்க வேண்டும் என்பதற்காகத் தான் அரசியல் அமைப்பில் இப்படிப்பட்ட ஒருவரை நியமித்து வைத்திருக்கிறார்கள். அந்தத் தலைவர் மூலமாகத் தான் எல்லா காரியங்களும் நடைபெறுகின்றன என்ற உணர்ச்சி மக்களுக்கு ஏற்படுகிறது. மக்களுக்கு அதன் மூலமாக ஒரு பிரதி ஏற்படும். அதன் மூலமாக என்னன்ன காரியங்களைச் செய்ய வேண்டும் என்றும் தோன்றுகிறது. கடைசியில் யாரிடம் சொல்வது என்பதைப் பற்றி ஒரு முடிவு இருக்க வேண்டும் என்பதற்காகத்தான் இந்த கவர்னர் பதவி வேண்டும் என்கிற அடிப்படையில் ஒரு முடிவுக்கு வந்தார்கள். அதோடு மட்டுமல்ல இப்பொழுது அரசாங்கம் நடப்பது பார்லிமெண்டரி டெமாக்ரஸி என்ற முறையில். அதாவது தேர்தல் முறையிலே, கட்சி அடிப்படையிலே அரசாங்கம் நடைபெற்று வருகிறது. சில சமயங்களில் மந்திரி சபையில் மாறுதல் ஏற்படலாம். அப்படியிருக்கக்கூடிய நிலைமையிலே இப்பொழுது இருந்துகொண்டிருக்கும் மந்திரி சபையே நீடித்து இருக்குமா என்பதை யோசித்துப் பார்க்கும் பொழுது, மந்திரி சபைகளில் மாற்றம் ஏற்படுகின்றன, நெருக்கடி ஏற்படுகின்றன. அந்த மாதிரி சந்தர்ப்பங்களில் இங்கு இருக்கக்கூடிய பொறுப்புகளை யார் ஏற்றுக்கொள்ளுவது என்பதை யோசித்துப் பார்த்தால், அதற்கு கவர்னர் என்ற ஒருவர் இருக்கவேண்டும் என்கின்ற முடிவுக்கு வர வேண்டியிருக்கிறது. பல தரப்பட்ட கருத்து வேற்றுமைகள் இருந்தால்கூட கடைசியில் இதுதான் நல்ல முடிவு, கவர்னர் என்ற ஒரு பதவி இருக்க வேண்டுமென்று முடிவு நம்முடைய பிரதிநிதிகள் கூடி செய்த முடிவுதான். வெளியிலிருந்து வேறுயாரும் வந்து இம்மாதிரி முடிவைச் செய்யவில்லை. அரசியல் அமைப்பில் நம்முடைய பிரதிநிதிகள் கூடி செய்த முடிவு இது. இதுபற்றி ஏதோ குறைவாக பேசுகின்ற காரணத்தினாலே, அல்லது இந்தப் பதவி அவசியமில்லை என்று பேசுகின்றன காரணத்தினாலே எந்த வித பலனும் ஏற்படப் போவதில்லை. அதற்குப் பதிலாக கவர்னர் பதவியை நாம் எதற்காக ஏற்படுத்தினோமோ அதனுடைய பலன் நமக்கு ஏற்படாமல் போய்விடலாம் என்பதை அங்கத்தினர்கள் உணரவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். மாறுகின்ற ஒரு சமயத்தில், மாறுதல் ஏற்பட்ட பிறகு, கவர்னர் இல்லாமலே வேறு வித அமைப்பு ஏற்படுத்தவேண்டுமானால் அரசியலமைப்பில் பலவித மாறுதல்கள் செய்ய வேண்டியிருக்கும். அது நல்லதாகவும் இருக்கலாம். அல்லது கெடுதலாகவும் இருக்கலாம். ஆனால், தேர்தல் அடிப்படையில் கட்சி அடிப்படையில் அரசாங்கம் நடந்துகொண்டிருக்கும்பொழுது கவர்னர் என்று ஒரு பதவி இருப்பது நல்லதுதான் என்பதை பெருவாரியான நிபுணர்கள் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள், ஆகவே திரும்ப திரும்ப இதைப் பற்றி பேசிக்கொண்டிருந்தால் பிரயோசனம் இல்லை என்பதை திரும்பவும் வற்புறுத்திச் சொல்ல விரும்புகிறேன்.

அடுத்தப்படியாக, கவர்னருக்கு அதிகமாக செலவு செய்யப்படுகிறது என்கின்ற பிரச்னை வருகிறது. அதிகமாக செலவு செய்யப்படுகின்றது என்ற கருத்திலுள்ள தவறு என்னவென்றால், நாங்கள் மந்திரிகள் எட்டு பேர்கள் இருக்கிறோம். இந்த நிர்வாகத்தை கடைசியாக எங்களுடைய பொறுப்பில் நடத்திக்கொண்டிருக்கிறோம். எங்களுக்கு உதவி செய்வதற்காக செகரடேரியட் முழுவதும் அமைந்திருக்கிறது. அதற்கு செலவு ரூ. 94 லட்சம். ரூ. 7, 8 லட்சம் கவர்னருக்குப் போக, பாக்கி இருக்கக் கூடிய ரூ. 86 லட்சமும் நிர்வாகத்தில் இருக்கக்கூடிய சிப்பந்திகளின் சம்பளமாக இருக்கிறது. அதற்காக யாராவது மந்திரிகளின் சம்பளம் ரூ. 86 லட்சம் என்று சொன்னால், அது எவ்வளவு பொருத்தமாக இருக்கும் என்பதை யோசித்துப் பார்க்கவேண்டும். கவர்னருக்கு

[Sri C. Subramaniam] [1st April 1958

மட்டும் அந்த 8½ லட்ச ரூபாயும் செலவிடப்படவில்லை. மந்திரிகளுக்கு உதவி செய்வதற்கு, மந்திரிசபை ஸ்தாபனம் இயங்குவதற்கு உதவியாக இருப்பதற்கு எப்படி மற்ற நிர்வாக அமைப்பு அவசியமோ, அதே மாதிரி கவர்னர் என்ற ஒரு பதவி, ஒரு ஸ்தாபனம் அவசியம் என்றால், அவருக்கு வேண்டிய உதவிகளையெல்லாம் செய்வதற்கு ஒரு நிர்வாக அமைப்பு அவருக்கு ஏற்படுத்திக்கொடுக்க வேண்டியிருக்கிறது. அந்த நிர்வாக அமைப்பிற்காக ஏற்படும் செலவையும் சேர்த்து அது கவர்னரின் சம்பளம், கவர்னருக்காக அவ்வளவு செலவு செய்யப்படுகிறது என்று சொல்வது பொருத்தமாக இருக்காது.

இன்னொரு விஷயத்தைப் பற்றியும் குறிப்பிட விரும்புகிறேன். சாப்பாட்டு செலவிற்காக, விருந்தினங்களுக்காக இவ்வளவு செலவு செய்யப்படுகிறதே என்று சில அங்கத்தினர்கள் குறிப்பிட்டார்கள். எல்லா கனம் அங்கத்தினர்களும் நன்றாக உணர்ந்திருப்பார்கள். நம்முடைய ராஜ்யத்திற்கு வேறு ராஜ்யங்களிலிருந்து வரும் விருந்தினர்கள் மட்டுமல்ல, பல்வேறு வெளி நாடுகளிலிருந்தும் விருந்தினர்கள் வருகிறார்கள். அந்த விருந்தினர்களில் அயல் நாட்டின் தலைவர்களாகவோ, பிரதம மந்திரியாகவோ இருக்கக்கூடியவர்களும் இருக்கிறார்கள். அவர்களெல்லாம் நம்முடைய ராஜ்யத்திற்கு வரும்பொழுது அவர்களுடைய தகுதிக்கு தகுந்தவாறு அவர்களை உபசரித்து அவர்களுக்கு வேண்டிய சௌகரியங்களை செய்யவேண்டியது மிகவும் அவசியம். அதற்கு ஒரு தனி நிர்வாகம் ஏற்படுத்திக்கொள்ளலாம். அதற்காக ஒரு தனி நிர்வாகம் ஏற்படுத்தினால் இந்த விருந்துகளை நடத்துவதற்கு எவ்வளவு செலவாகும் என்பதை நான் கணக்கு போட்டுப் பார்த்திருக்கிறேன். நீங்களும் கணக்கு போட்டு பாருங்கள். நான் கணக்குப் போட்டுப் பார்த்து சொல்லுகிறேன். இப்பொழுது கவர்னர் என்ற ஒரு பதவி இருக்கக்கூடிய காரணத்தினாலே, அதை ஒட்டியே ஒரு நிர்வாக அமைப்பை ஏற்படுத்தி, வரக்கூடிய விருந்தினர்களை உபசரிப்பதற்கு ஒரு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இதனால் செலவு ரொம்பவும் குறைவாக ஆகிறது. கணக்குப் போட்டுப் பார்த்தால் இதன் மூலம் செலவு ரொம்பவும் குறைவாகத்தான் ஆகிறது என்ற முடிவுக்குத்தான் யாரும் வரமுடியும். இருக்கக்கூடிய கவர்னர் பதவியை வைத்துக்கொண்டு அதன் மூலம் நமக்கு வேண்டிய மற்ற காரியங்களையும் செய்வதற்கு இந்த அமைப்பை உபயோகப்படுத்திக்கொள்வதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. கவர்னர் மாளிகையில் தங்கியிருக்கிறோம் என்று வெளிநாடுகளிலிருந்து வரும் தலைவர்களுக்கும் ஒரு மனத் திருப்தி ஏற்படுகிறது. இந்த அடிப்படையில் பார்த்தால் ரூ. 8½ லட்சம் செலவு அதிகம் என்று சொல்லமுடியாது. இதில் பெரும்பகுதி இம்மாதிரி காரியங்களுக்காக ஆகக்கூடிய செலவுதான். மற்ற வெளி நாட்டு விருந்தினர்கள் வந்திருக்கவேண்டுமென்றால் அதற்கு ஒரு கட்டிடம் தேவை. அதற்கு தகுந்த கட்டிடம் மட்டும் இருந்தால் போதாது. அந்த கட்டிடத்தை சுற்றிலும் நல்ல பூங்காக்கள் தேவை. தமிழ் நாட்டில் வெறும்பொட்டல் காடாக இருக்கிறது என்று இங்கே தங்கும் விருந்தினர்கள் நினைக்கக்கூடாது. இருக்கக்கூடிய இடத்தை பார்ப்பதற்கு அழகாக நல்ல தோட்டங்களை அமைத்து வெளிநாட்டு விருந்தினர்களுக்கு மனது திருப்திபடக்கூடிய முறையில் அமைப்பது மிகஅவசியம். அப்படி தோட்டங்களை அமைக்க வேண்டுமானால் அதற்கு வேண்டிய வேலையாட்களை நியமிக்கவேண்டியதாக இருக்கிறது. அப்படி செலவழிக்கும் பணம் வேறு யாருக்கும் போவதில்லை. அங்கு வேலை செய்யும் ஏழை தொழிலாளர்களுக்கு சம்பளமாகக் கொடுக்கப்படுகிறது. அதற்கு மேற்பட்ட செலவு ஒன்றும் அதிகமாக இருக்காது என்பது கணக்கை எடுத்துப் பார்த்தால் தெரியவரும் என்பதைத் தெரிவித்துக்கொள்ளவிரும்புகிறேன்.

இதற்கு முன்பு கிண்டியில் இருக்கக்கூடிய 1,200 ஏகராவும் கவர்னர் பராமரிப்பின் கீழே இருந்து வந்தது. 1,200 ஏக்கர் அவசியமில்லை, அதை குறைக்கவேண்டுமென்பதற்காக, 200 ஏக்கராவாக குறைத்திருக்கிறோம். பாக்கி இருக்கக்கூடிய 1,000 ஏக்கராவை வன இலாகாவோடு சேர்த்துவிட்டோம்.

1st April 1958] [Sri C. Subramaniam]

அத்துடன் ஒரு சிறு பகுதி ஹயர் டெக்னலாஜிகல் இன்ஸ்டிடியூட்டிற்கு கொடுப்பதற்கு ஏற்பாடு செய்துவிட்டோம். அந்த அளவிற்கு செலவும் குறையத்தான் செய்யும். வன இலாகா இதற்காக அதிகமாக செலவழித்தாலும் அதைப்பற்றி அங்கத்தினர்கள் கவலைப்படப் போவதில்லை. கவர்னர் தலைப்பின் கீழ் இருந்தால்தான் இதற்காக எப்படி இவ்வளவு ரூபாய் செலவழிக்க முடியும் எத்தனை லட்சம் ரூபாய் செலவழிப்பது என்றெல்லாம் வாதங்கள் கிளம்பும். ஆனால் அதே இனத்திற்கு இன்னொரு பக்கத்தில் 2 லட்சம் ரூபாய் செலவழித்தால் கூட ஆட்சேபணையில்லை. ஆனால் கவர்னர் தலைப்பின்கீழ் செல்வு செய்யப்பட்டால்தான் அதற்கு ஆட்சேபணை எழும்பும். இதையெல்லாம் கவனித்து பார்க்கும்பொழுது செலவு ஒன்றும் அதிகமாக செய்யப்படவில்லை என்பது புலப்படும். அதேமாதிரி ஒரு பெரிய வீட்டை வைத்துக் கொண்டிருந்தால் மட்டும் போதாது. அதை பாழடைய விடமுடியுமா? அதை நல்ல முறையில் பராமரிக்கவேண்டியிருக்கிறது. அதற்காக வேண்டிய சிப்பந்திகளை நியமிக்க வேண்டிய நிலைமை வருகிறது. இவைகளையெல்லாம் நாம் பார்க்கும்பொழுது, இந்த ராஜ்ய அரசியல் அமைப்பில் கவர்னர் பதவி இருக்க வேண்டுமென்று இருப்பதால், அதன் மூலம் நாம் பல்வேறு காரியங்களை செய்துகொள்ளவேண்டுமென்ற அடிப்படையில் ஒன்றுக்கு ஒன்று பிணைக்கப்பட்டு அதனால் இவ்வளவு செலவு ஆகிறதே தவிர, கவர்னருக்குமட்டும் இவ்வளவு செலவு ஆவதில்லை. கவர்னர் ஒரு அறையில்தான் இருக்க முடியும். பல அறைகளில் ஒரே சமயத்தில் அவரால் தூங்க முடியாது. இதுவரையில் கவர்னராக வந்திருக்கக்கூடியவர்களைப் பார்த்தால், அவர்கள் பெரிய குடும்பத்தை வைத்துக் கொண்டிருப்பவர்கள் அல்ல. குழந்தைகள் இல்லாதவர்களும் அல்லது மனைவி இல்லாதவர்களும்தான் கவர்னர்களாக வருகிறார்கள். அவர்கள் பெரிய குடும்பம் வைத்திருப்பதால் இவ்வளவு செலவாகிறது என்று சொல்லுவதற்கு இடமில்லை. இப்போழுது இருக்கும் மற்றொரு நிலைமையையும் விளக்க விரும்புகிறேன். வெள்ளைக்காரர்கள் இருக்கக்கூடிய காலத்தில் கவர்னர் அவர்களுக்கு மட்டுமல்ல, அவர்களுடைய குடும்பத்திற்கும் அவர்களுடைய சொந்த விருந்தினர்களுக்கும் பொது நிதியிலிருந்து செலவிடப்பட்டது. ஆனால் இப்பொழுது இருக்கக்கூடிய அமைப்பில், பொது சமையலில் அவர்கள் குடும்பமும் விருந்தினர்களும் சாப்பிட்டால், அதற்காகும் பணத்தை கணக்குபார்த்து அவர்கள் கொடுத்து விடுகிறார்கள். அல்லது, அவர்கள் தங்கள் சொந்த செலவில் தனியாகவே சமையல் வைத்துக்கொள்கிறார்கள். விருந்து காலத்தில் பொதுவாக எல்லோருடனும் உட்கார்ந்து சாப்பிடுகிறார்கள். பல அங்கத்தினர்கள் அனாவசியமாக வீண் செலவு ஆகிறது என்று சொன்னதை மறுக்கவேண்டுமென்பதற்காகத்தான் சமையல் விஷயம் போன்ற ஒரு சிறு விஷயத்தைக்கூட எடுத்துச்சொல்ல வேண்டியிருக்கிறது. இந்தச் சிறிய விவரத்தைக் கூட இங்கு எடுத்துச் சொல்லவேண்டியதன் அவசியம், கவர்னருக்காக வீணாக இந்த ஏழை நாட்டிலே ரூ. 8½ லட்சம் செலவழிக்கப்படுகிறது என்ற அபிப்பிராயம் மாறவேண்டுமென்பதற்காகத் தான் இந்த விளக்கத்தை இப்போது கொடுத்திருக்கிறேன். ஆகவே கனம் அங்கத்தினர்கள் இனி மேலாவது, திருப்பி திருப்பி இந்த விஷயத்தையே சொல்லிக் கொண்டிருக்கமாட்டார்கள் என்று நம்புகிறேன். இன்றைக்கு இருக்கும் நிலைமையில் கவர்னர் பதவி அவசியமாக இருப்பதால், அந்தப் பதவிக்கு வேண்டிய உபகரணங்களும் அவசியமாக இருக்கின்றன. இதை உணர்ந்து, இனிமேல், கவர்னருக்காக ஏன் இவ்வளவு பணம் செலவு செய்யவேண்டுமென்று வாதம்செய்ய முற்படாதபடி கனம் அங்கத்தினர்கள் தங்களை கட்டுப்படுத்திக்கொள்ளவேண்டும். அந்த வாதத்தை சுலபமாக எடுத்துரைக்கலாம். கனம் அங்கத்தினர்கள் அவ்வாறு பேசிப்பேசி பழகி விட்டனர். புள்ளிவிவரங்களைப் புரட்டிப்பார்க்காமலே வாதாடலாம். கனம் அங்கத்தினர்கள், அவ்வாறு வாதாடுவதற்கான தூண்டுதலுக்கு இடங் கொடுக்காமல் தங்களைக் கட்டுப்படுத்திக்கொள்ள வேண்டும். "இந்த வாதம் தான் எங்களிடம் இருக்கிறது. இதற்கு மேல் எங்களிடம் எதுவும் ஸ்டாக் இல்லை" என்று கனம் அங்கத்தினர்கள் கூறி இந்த வாதத்தையே திரும்பவும் சொன்னால் நான் ஒன்றும் சொல்லவில்லை.

**Sri V. K. KOTHANDARAMAN :** கனம் சபாநாயகர் அவர்களே, எந்த ஒரு அரசியல் கட்சி ஆட்சி செலுத்தினாலும், கவர்னர் ஒரு பொதுவான தலைவரைப்போல் இருக்கிறார் என்றும், ஆதலால் கவர்னர் பதவி அவசியம் என்றும் கனம் அமைச்சர் சொன்னார். பொதுவாக செயல்படும் கவர்னர் எந்த அரசியல் கட்சியையும் சேராதவரா ? மேலும், கல்லை வைத்து அதை கடவுளாக வழிபடுவதுபோல் கவர்னரை வழிபடுகிறோம் என்றும் கனம் அமைச்சர் கூறினார். அப்படியென்றால், கனம் அமைச்சர் கவர்னரைக் கல்லைப்போல் நினைக்கிறாரா ? கவர்னர் கல்லுக்குச் சமானம் என்று அவர் நினைக்கிறாரா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** ஏதாவது உபமானம் சொன்னால் சிலர் அதை கடைசிவரையில் நீட்டிப்பார்த்துவிடுகிறார்கள் ; அதாவது எல்லா விஷயங்களுக்கும் ஒப்பிட்டுப்பார்க்கிறார்கள். கவர்னர் கல்லுக்குச் சமானமானவர் என்று நான் நினைக்கவில்லை. கவர்னர் கல்லுக்குச் சமானமானவர் அல்ல என்று சொல்லிக்கொள்கிறேன். ஆனால், நான் சொன்ன உபமானத்தைப்பற்றி தவறாக அர்த்தம்கூறி, கவர்னர் கல்லுக்குச் சமானமானவர் என்று சுப்பிரமணியம் அவர்களே சொல்லிவிட்டார்கள் என்று எதிர்க்கட்சிக்காரர்கள் பிரசாரம் செய்வார்களேயானால், அதைப்பற்றி நான் கவலைப்படவில்லை. கவர்னர் கல்லுக்குச் சமானமானவர் என்று நான் கருதவில்லை என்றுமட்டும் நான் சொல்லிக்கொள்கிறேன். கவர்னர் எந்த அரசியல் கட்சியையும் சேராதவரா என்று கேட்கப்பட்டது. கவர்னர்கள், சட்டசபை சபாநாயகர், கோர்ட் ஜட்ஜுகள், ஸெர்வீஸ் கமிஷன் தலைவர் முதலியவர்கள் அந்தப் பதவிகளுக்கு வருவதற்கு முன்பு எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்களாக இருந்திருந்தாலும், பதவிக்கு வந்தபிறகு பொதுப்படையாக இயங்கவேண்டும். அப்படி இயங்காவிட்டால் அந்தப் பதவிகளின் மதிப்பை அவர்கள் குறைந்தவர்களாக ஆவார்கள். அந்தப் பதவிகளில் இருப்பவர்கள் பொதுப்படையாகவே இயங்குகிறார்கள் என்று நான் சொல்ல முடியும் ; பல அனுபவங்களைக்கொண்டு நான் அவ்வாறு சொல்லமுடியும். ஆகையால், காங்கிரஸ்காரர்கள் கவர்னர்களாக நியமிக்கபடுவதால் அவர்கள் காங்கிரஸ்காரர்களுக்குமட்டும் ஆதரவாக நடந்துகொள்கிறார்கள் என்றும் அந்த முறையில் அவர்கள் அரசியல் கட்சிகளிடம் பாரபட்சமாக நடந்துகொள்கிறார்கள் என்றும் சொல்வது தவறு ; அவ்வாறு கூறுவது, ஜனாதிபதியையோ கவர்னரையோ தனிப்பட்ட முறையில் குறைகூறுவதாகும். முன்பு காங்கிரஸ் கட்சியிலிருந்த கனம் ஸ்ரீ. கிருஷ்ணராவ் அவர்கள் இந்த சபையின் சபாநாயகராக ஆன பிறகு காங்கிரஸ கட்சிக்கு ஆதரவாகவும் மற்ற கட்சிகளுக்கு பாதகமாகவும் நடந்துகொள்கிறார்கள் என்று யாரும் சொல்லமாட்டார்கள் என்று நம்புகிறேன். அவர் நியாயமாக, பாரபட்சமின்றி, எல்லாக் கட்சிகளிடத்தும் பொதுவாக நடந்துகொள்கிறார் என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்கிறார்கள். ஸ்ரீ அண்ணாதுரையும் அவ்வாறு பத்திரிகையில் எழுதியிருக்கிறார். இது குறித்து நான் மகிழ்ச்சியடைகிறேன்.

அடுத்தபடியாக, ஒரு இனத்தில் 20,000 ரூபாய் ஆடிட் செய்யப்படாமலே இருக்கிறது என்று கூறப்பட்டது. அந்த தொகை முன்பு 2–3 லட்சமாக இருந்து வந்தது. இப்போது அது 20,000-ஆக இருக்கிறது. ஏழைகளைப் பராமரிக்கும் ஸ்தாபனங்கள் போன்ற சில நல்ல ஸ்தாபனங்கள் இருக்கின்றன. அப்படிப்பட்ட ஸ்தாபனங்களுக்கு சில சமயங்களில் ஒரு சிறிய தொகையையாவது நன்கொடையாக கவர்னர் கொடுப்பதற்காக இந்தத் தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது. சர்க்காரின் பிரதிநிதி என்ற முறையில் கவர்னர் அந்த ஸ்தாபனங்களுக்கு போகும்போது அவைகள் தங்கள் குறைகளைத் தெரிவித்து சர்க்காரிடமிருந்து உதவிகோரினால் அப்போது கவர்னர், அவர்களுக்கு ஒரு சிறிய தொகை பணத்தையாவது நன்கொடையாகக் கொடுப்பதற்கு வகைசெய்வதற்காக இந்தப் பணம் ஒதுக்கப்படுகிறது. மேலும் சிலர் ரொம்பக் கஷ்டப்படுகிறார்கள். அவர்கள் வெளியில் போய் பிச்சை கேட்க முடியாது. அப்படிப்பட்டவர்களுக்கு கவர்னர் மாதம் நூறு ரூபாயோ இருநூறு ரூபாயோ, தாம் உசிதம் என்று கருதினால் நன்கொடை அளிப்பதற்கு வகைசெய்வதற்காக இந்தப் பணம் ஒதுக்கப்படுகிறது.

1st April 1958] [Sri C. Subramaniam]

முதன் மந்திரிக்குக் கூட இப்படிப்பட்ட பணம் ஒதுக்கலாம் என்று எனக்குத் தோன்றுகிறது. அவர்களிடம் நிதி உதவி கோரும் இப்படிப் பட்ட ஸ்தாபனங்களுக்கும் மனிதர்களுக்கும் "இல்லை" என்று பதில் சொல்வதைவிட ஏதாவது சிறு தொகை பணத்தை நன்கொடையாகக் கொடுப்பது நல்லது என்று எனக்குத் தோன்றுகிறது. இந்த 20,000 ரூபாய்க்கு ஆடிட் அவசியமில்லை என்று கருதப்படுகிறது.

**Sri A. GOVINDASAMY** : இந்தத் தொகை "Charitable" செல வினத்தில் வரவில்லை. இது "Expenditure from contract allowances" என்ற இனத்தில் வருகிறது.

**The Hon. Sri C. SUBRAMANIAM** : எந்த செலவாக இருந்தாலும் அவசியமான செலவுதான். ஆகவே, கவர்னருக்காக இவ்வளவு பணச் செலவு செய்ய வேண்டாம் என்றும் இந்தச் செலவு வீண் செலவு என்றும் சொல்லிவிட முடியாது.

கவர்னருக்கான செலவிற்கெதிராக செய்யப்படும் வாதத்திற்கு அடுத்த படியாக, இந்த ராஜ்யத்திற்கு தமிழ் நாடு என்று ஏன் பெயர் வைக்கக் கூடாது என்ற வாதம் ஆரம்பிக்கப்படுகிறது. கனம் அங்கத்தினர்கள் முதல் வாதத்தை விட்டதும் இந்த இரண்டாவது வாதத்தை ஆரம்பிக்கிறார்கள். நானும் பல இடங்களில் பேசும்போது "தமிழ்நாடு தமிழ்நாடு" என்று சொல்லியிருக்கிறேன். இந்த ராஜ்யத்திற்கு தமிழ்நாடு என்று பெயர்வைத்து விட்டால் அதன்காரணமாக இந்த ராஜ்யத்தின் பெருமை உயர்ந்துவிடப் போவதில்லை. இந்த ராஜ்யத்திற்கு தமிழ்நாடு என்று பெயர் வைக்காத தால் இந்த ராஜ்யத்தின் பெருமை குறைந்துவிடவும் இல்லை. பெயரினால் பிரமாதப் பெருமை வந்துவிடுகிறது என்ற மனப்பான்மை தவறானது. அந்த மனப்பான்மை மக்களிடையே வளரக்கூடாது. மக்களுக்கு இருக்கும் இந்த மனப்பான்மை மாற வேண்டும். ஆகவேதான் இந்த ராஜ்யத்திற்கு "தமிழ்நாடு" என்று பெயர் வைக்க வேண்டுமென்ற பிரசாரங்களையோ கிளர்ச்சிகளையோ இந்த சர்க்கார் மதிக்கவில்லை. அப்படிப்பட்ட பிரசாரங்களோ கிளர்ச்சிகளோ இருக்கும்வரையில் இந்த சர்க்கார் இந்த ராஜ்யத்திற்கு "தமிழ்நாடு" என்று பெயரிட ஏற்பாடு செய்யாது. யாரும் அவ்வாறு பிரசாரம் செய்யாமலும் கிளர்ச்சி செய்யாமலும் சுமார் இரண்டு வருஷங்கள் இருந்தால், இந்த சர்க்கார் ஒரு வேளை இந்த ராஜ்யத்திற்கு "தமிழ்நாடு" என்று பெயர் வைப்பதற்கு ஏற்பாடு செய்யக்கூடும். (சிரிப்பு).

அதற்கடுத்தபடியாக, மந்திரிகளைப்பற்றி கனம் அங்கத்தினர்கள் பேசினார்கள். ஒவ்வொரு மந்திரியும் எவ்வளவோ இலாக்காக்களைக் கவனிக்கிறார் என்றும் எவ்வளவோ வேலைகளைச் செய்கிறார் என்றும் பல கனம் அங்கத்தினர்கள் கூறினார்கள். மந்திரிகளிடம் அவர்கள் அவ்வாறு கருணைகாட்டியதற்காக நான் அவர்களுக்கு நன்றிசெலுத்தக் கடமைப் பட்டிருக்கிறேன். அவர்கள் உண்மையிலேயே அவ்வாறு கருதுகிறார்களா அல்லது வெறுமனே அவ்வாறு கூறினார்களா என்று எனக்குத் தெரிய வில்லை. ஒரு வேளை மந்திரிகளைக் குறைகூறுவதற்காக அவ்வாறு சொன்னார்களா என்றும் தெரியவில்லை. இன்றுள்ள நிலைமையில் எத்தனை மந்திரிகள் அவசியமோ அத்தனை மந்திரிகள்தான் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். எத்தனை மந்திரிகள் அவசியம் என்று பார்க்கப்பட்டுதான் இத்தனை மந்திரிகள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். இன்னும் சில மந்திரிகளை நியமித்தால் வேலைகள் இன்னும் நன்றாக நடக்கும் என்று சில கனம் அங்கத்தினர்கள் சொன்னார்கள். எட்டு மந்திரிகள் வேண்டாம், நான்கு மந்திரிகள் போதும் என்று வேறு சிலர் நினைக்கிறார்கள். அவ்வப்போது இருக்கும் முதல் மந்திரி எத்தனை மந்திரிகள் அவசியம் என்று பார்த்துத் தான் மந்திரிகளை நியமிக்கிறார். மந்திரிசபையும் இதை கவனிக்கிறது. இப்போது மந்திரி சபையில் மந்திரிகள் சரியான எண்ணிக்கையில்தான் இருக்கிறார்கள் என்று நாங்கள் நினைக்கிறோம். நாங்களும் தனிப்பட்ட மனிதர்கள் இல்லை. நாங்களும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்தான் எங்களிடம் குறைகள் இருக்கக்கூடும். எங்களிடம் குறைகள் இருந்தால் கனம் அங்கத்தினர்களின் குறைகளும் அவைகளுள் இருக்கின்றன என்று

தான் கொள்ளவேண்டும். எங்களிடம் குறைகள் இருந்தால் அதற்கு கனம் அங்கத்தினர்களும் பொறுப்பாளிகள். நாங்களும் சாதாரண மனிதர்கள்தான். நாங்கள் சாதாரண மனிதர்களின் பிரதிநிதிகளாகத் தான் இங்கே இருக்கிறோம். பிரதிநிதிகளாக இருக்கிறோம் என்ற முறையில் தான் எங்களுக்கு சிறப்பு இருக்கிறதே தவிர, தனிப்பட்ட முறையில் எங்களுக்கு எந்தவிதமான சிறப்பும் இல்லை என்று நான் பல தடவைகள் சொல்லியிருக்கிறேன். நாங்கள் தவறு செய்தால் அதை நீங்கள் எடுத்துக் காட்டலாம். தவறை எடுத்துக் காட்டினால் நாங்கள் திருந்துவோம். நிர்வாகத்தில் எல்லாம் ஊழலாக இருக்கிறது என்றும் நாங்கள் சரிவர ஒன்றும் செய்யவில்லை என்றும் கனம் அங்கத்தினர்கள் சொன்னால், அவர்கள் ஆங்காங்கே நடக்கும் விஷயங்களைத் தெரிந்துகொண்டு அவ்வாறு சொல்கிறார்களா அல்லது வெறுமனே பொதுவாகச் சொல்கிறார்களா என்று தெரியவில்லை; "ஏதோ குற்றச்சாட்டுகளை போட்டு வைப்போம்; சர்க்காரின் மேல் பட்டால் படட்டும், படாவிட்டால் போகட்டும்" என்ற எண்ணத்தில் அவர்கள் அவ்வாறு சொல்கிறார்களோ என்று நினைக்கத் தோன்றுகிறது; அவ்வாறு அவர்கள் பேசும்போது அதை கவனிக்கவோ ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவோ எங்களுக்குத் தோன்றவில்லை.

குற்றங்கள் சொல்லும்போது இன்ன குற்றங்கள் என்று சொல்லவேண்டும். "இந்தக் குறைகளை என் மாற்றிக்கொள்ளக்கூடாது" என்று குறித்துச் சொன்னால், எங்களுக்குப் படும். உண்மையான குற்றமாக இருந்தால், மாற்றிக்கொள்ள முயற்சி செய்யலாம். குறிப்பாகச் சொல்லாமல் "உங்கள் நிர்வாகம் ஊழல்; உங்களுக்குத் திறமை இல்லை; எல்லாம் கெட்டுப் போய்விட்டது" என்று பொதுவாக மந்திரி சபையைப்பற்றிச் சொன்னால், அந்த மந்திரி சபையைத்தான் தமிழ்நாட்டு மக்கள் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள், அது நம்முடைய தலைவிதி என்று பொறுத்துக் கொள்ள வேண்டுமேயொழிய வேறு ஒன்றும் ஏற்பட முடியாது. குற்றங்களைத் திருத்திக் கொள்ளும் வாய்ப்பைக் கொடுப்பதில்லை, குற்றம் சொல்கிறவர்கள், பொதுவாக, ஒட்டுமொத்தமாக, "எல்லாம் மோசம், எல்லாம் ஊழல், நிர்வாகத்தில் எந்தவிதமான நன்மையும் இல்லை, இந்த நிர்வாகத்திலே எல்லாம் கெட்டுவிட்டது" என்று சொன்னால் அதை எப்படி மாற்றிக்கொள்வது? எந்த விதத்திலே திருத்திக் கொள்வது? குற்றங்களைச் சொல்கிறவர்கள் திருத்திக் கொள்வதற்கு வழி சொல்கிறார்களா, நிச்சயமாகச் சொல்கிறார்களா, அல்லது எதிர்க் கட்சியில் இருப்பதற்காகச் சொல்கிறார்களா என்று சந்தேகப்படக்கூடிய நிலைமைக்கு வந்துவிடுகிறது. ஆகவே, குற்றம் சொல்பவர்கள் பொறுப்பாக, ஜாக்கிரதையாக இன்ன இன்ன குற்றங்கள் என்று எடுத்துச் சொன்னால் நன்றாக இருக்கும்.

இன்னொரு கனம் அங்கத்தினர் அவர்கள் குறிப்பாகச் சொன்னார்கள் "மந்திரிகள் வெளியில் சுற்றுப்பிரயாணம் செய்யும்போது பொதுக் கூட்டத்தில் பேசுகிறார்கள், திராவிட முன்னேற்றக் கழகத்தைப்பற்றி பேசுகிறார்கள்" என்று சொன்னார்கள். திராவிட முன்னேற்றக் கழகத்தைப் பற்றி பேசுகிறோம் என்றால் என்ன கருத்தினால் பேசுகிறோம்? இன்றைக்கு நம்முடைய நாட்டுக்கு ஏதாவது ஒரு தீங்கு—கெடுதல்—வருகிறதென்றால், அதற்கு முக்கிய காரணம் இந்த நாட்டுப் பிரிவினைக் கொள்கை என்பதை நாங்கள் தீவிரமாக உணருகிறோம். அப்படிப்பட்ட ஒரு கெடுதல் எப்படியாவது பரவும் என்ற பயம் ஏற்பட்டாலும் சரி, பரவுவதைத் தடுக்க வேண்டுமென்ற கடமையுணர்ச்சி ஏற்பட்டாலும் சரி, மக்களுக்கு அதனால் ஏற்படும் தீமைகளை எடுத்துச் சொல்வது மிக மிக அவசியமாக இருக்கிறது. அதன் காரணமாகத்தான் அவர்களுடைய பிரிவினைக் கொள்கையிலே இருக்கும் கஷ்டங்கள் என்ன, அதனால் வரக்கூடிய தீமைகள் என்ன என்பதை எடுத்துச் சொல்வது இப்பொழுது சர்க்கார் பொறுப்பிலே இருக்கும் மந்திரிகளுடைய கடமை என்பதை நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஆகவே, இன்றைக்கு அதைப்பற்றி சொல்வதென்றால், நாங்கள் ஒரு இடத்திற்குப் போய், அதைப்பற்றி அங்கே பேசாமல் வந்தால் நாங்கள் கடமையிலிருந்து தவறிவிட்டவர்கள் ஆவோம் என்று சொல்ல விரும்புகிறேன். ஆகவே தான் அவர்களுடைய அடிபடையான கொள்கை தவறானது என்று நாங்கள் உண்மையாக நம்பினால், அதை மக்களிடத்திலே சொல்லி,

மக்களிடத்திலே இந்த வியாதி பரவவொட்டாமல் பார்த்துக்கொள்ள மிகவும் கட்மைப்பட்டிருக்கிறோம். அந்த வகையில் அமைச்சரவை கடமை யாற்றும்போது எல்லாச் சந்தர்ப்பங்களையும் பயன்படுத்தி, இந்த வியாதி யைப் பரவ விடாமல் பார்த்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. தொத்து நோயைப் பரவ விடக்கூடாது. பரவவிட்டால் மேலும் மேலும் அதிகமாகப் பரவி விடும். இது நல்லதாகத்தானே இருக்கலாம் என்று பேசலாமா ? காலராவும் பிளேக்கும் பரவினால் அது நல்லதல்ல. அதைப்போலவே தான் பிரிவினைக் கொள்கை நாட்டில் எவ்வளவுக்கெவ்வளவு பரவுகிறதோ அவ்வளவுக்கவ்வளவு கெடுதல், என்று உணர்ந்து அந்த வியாதியைத் தடுப்பது எங்களுடைய கடமை ; மந்திரிகளாக இருக்கும் எங்களுடைய கடமை. அதைப்பற்றி பொதுக்கூட்டத்தில் பேசாமல் வந்துவிட்டால் நாங் கள் எங்களுடைய கடமையிலிருந்து தவறிவிட்டவர்கள் ஆவோம் என்று சொல்ல விரும்புகிறேன்.

இன்றைக்குப் பல திட்டங்களை நிறைவேற்றவேண்டுமென்று சொன்னால், தனியாக மந்திரிகள் இருந்து நடத்தக்கூடிய காரியங்கள் அல்ல. உத்தி யோகஸ்தர்களே இருந்து நடத்தக்கூடிய காரியங்களும் அல்ல. சட்டம் போட்டு நிறைவேற்றக்கூடிய காரியங்களும் அல்ல. இவைகளுக்கெல்லாம் மேலாக மக்களுடைய ஒத்துழைப்பையும் மக்களுடைய சக்தியையும் பெற் றுத்தான் இந்தத் திட்டங்களை நிறைவேற்ற வேண்டியதாக இருக்கிறது. அவர்களிடத்தில், நடக்கும் திட்டங்கள் என்ன, மக்கள் அதிலே செய்ய வேண்டிய காரியங்கள் என்ன என்று அவர்களுடைய சக்தி சிதறுண்டு போகக்கூடாது என்று எடுத்துச் சொல்லவேண்டியது எங்களுடைய கடமை என்று நினைக்கிறேன். இவ்வாறு மக்களுடைய சக்தியைத் திரட்டின லொழிய, மக்களுடைய ஒத்துழைப்பைப் பெற்றாலொழிய, திட்டங்களை நிறைவேற்றிவிட முடியாது. மக்களுடைய ஒத்துழைப்பு இல்லாமல், ஏதோ டைலைப் பார்த்து, உத்தரவு போடுவதனால் எந்த விதமான பலனும் ஏற் பட்டுவிடாது. இன்றைக்கு இருக்கும் நிலைமையில் மந்திரிகள் அந்த ஒரு பொறுப்பையும் ஏற்றுத்தான் ஆகவேண்டும். மக்களிடத்தில் சென்று தாங்கள் செய்யக்கூடிய வேலைத் திட்டங்களுடைய கொள்கையின் அடிப் படையையும் இன்றைக்கு இதை எதிர்க்கின்றவர்களுடைய கொள்கைகளில் இருக்கும் பலவீனங்களையும், தீமைகளையும் மக்களுக்கு எடுத்துச் சொல்லித் தான் ஆகவேண்டியிருக்கிறது என்பதில் எனக்கு எந்தவிதமான சந் தேகமும் கிடையாது. ஆகையால், இதை மந்திரிகள் சொல்லக்கூடாதென்று சொன்னால் மந்திரிகள் தங்களுடைய கடமையைச் செய்யக்கூடாது என்று சொல்வது போல்தான் ஆகும், அப்படி சொல்பவர்கள் வேறுபட்ட கருத் துடையவர்களாகத்தான் இருப்பார்கள் என்று நான் குறிப்பிட விரும்பு கிறேன். நாங்கள் கடமை என்று உணருகிறதை மக்களுக்கு எடுத்துச் சொல்லவேண்டியது எங்களுடைய கடமை ; அந்தக் கடமையை ஆற்ற வேண்டியது எங்களுடைய பொறுப்பு என்பதையும் கனம் அங்கத்தினர்கள் ஒப்புக்கொள்வார்கள் என்றே நான் நம்புகிறேன்.

**Sri T. S. RAMASWAMY PILLAI** : கனம் அமைச்சர் அவர்கள் குறிப்பிடுவது **official function** ஐயா ? அல்லது கட்சி **function** ஐயா ? உதாரணமாக அமைச்சர் அவர்கள் ஒரு கம்யூனிடி மண்டபத்தைத் திறக் கிறார்கள் என்றால், அப்பொழுது கட்சிப் பூசல்களையும் கட்சி விவகாரங்களையும் இழுக்கவேண்டுமா ? அப்படி இழுத்தால் அது சரி ஆகுமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : ஏதோ ஒரு திறப்பு விழா நடக்கிறது ; அல்லது பள்ளிக்கூடத்தில் நடக்கும் நிகழ்ச்சிகள் இருக் கின்றன என்றால் அதுபோன்ற நிகழ்ச்சியில் கலந்துகொள்ளும் போது கட்சிப் பிரசாரம் என்பதே கிடையாது. நம் திட்டத்தைப்பற்றி தான் அங்கே பேசுகிறோம். ஆனால், பொதுக் கூட்டங்களிலே, கட்சியினுடைய கொள்கைகளை எடுத்துச் சொல்லுகிறோம். அப்படிச் சொல்வது தப்பு, அப்படிச் சொல்லக்கூடாது என்று சொன்னால், அதை ஒத்துக்கொள் வதற்கு நான் தயாராயில்லை.

அடுத்தபடியாக, நிர்வாகத்தில் எங்கு பார்த்தாலும் லஞ்சம் (கனம் அங்கத்தினர் ஸ்ரீ எ. கோவிந்தசாமி அவர்கள் விரலைக் காட்டி, பேசுவ தற்கு முயற்சித்துக்கொண்டிருக்கும்போது) : ஒன்றுக்குப் போவதற்காகவா விரலைக் காட்டுகிறீர்கள் (சிரிப்பு).

**Sri A. GOVINDASAMY** : சபைத் தலைவர் அவர்களே, நான் அமைச்சர் அவர்களிடத்திலே ஒரு விஷயம் கேட்க வேண்டுமென்று எழுந்தால், "ஒன்றுக்கு வருகிறதா ?" என்று கேட்கிறார். ஆனால் அவர் தான் பல முறை வெளியே சென்று ஒன்றுக்குப் போய்விட்டு வருகிறார்.

**The Hon. Sri C. SUBRAMANIAM** : கனம் அங்கத்தினர் அவர்கள் தவறாக எடுத்துக் கொள்ளக்கூடாதென்று நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

**Sri A. GOVINDASAMY** : அமைச்சர் அவர்கள் கட்டிடத் திறப்பு விழாவுக்கும், பள்ளிக்கூடத் திறப்பு விழாவுக்கும், ஹாஸ்டல் திறப்பு விழாவுக்கும் செல்லும்போது கட்சிகளைத் தாக்கிப்பேசுவது இல்லை என்று சொல்கிறார். அப்படிப் பேசியதாக ஆதாரத்தோடு நான்சொல்ல முடியும். இனிமேலாவது திருத்திக் கொள்வார்களா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : அம்மாதிரி செய்வது தப்பு என்று நான் ஒத்துக்கொள்கிறேன். கோவிந்தசாமி அவர்கள் நான் சற்று முன் சொன்னதை தப்பாக எடுத்துக்கொண்டுவிட்டார் என்று நினைக் கிறேன். அம்மாதிரி தப்பாக அவர்கள் எடுத்துக் கொள்ளக்கூடாது என்று கேட்டுக்கொள்ளுகின்றேன். எல்லாவற்றையும் தப்பாக எடுத்துக்கொண்டு விட்டால் ஒன்றும் சுவை இல்லாமல் போய்விடும். தப்பு என்றால், நான் சொல்லியதை வாபஸ் வாங்கிக்கொள்ள வேண்டுமென்று கோவிந்தசாமி அவர்கள் சொல்லுவார்களானால் வாபஸ் வாங்கிக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, எங்குபார்த்தாலும் லஞ்ச மயம் என்றும், லஞ்சத்தை ஒழிக்கவேண்டும் என்றும், "ஒழிக லஞ்சம்" என்றும் கனம் அங்கத் தினர் ஸ்ரீ ஜெகன்னாதன் அவர்கள் குறிப்பிட்டார்கள். இதிலே இருக்கும் கஷ்டம் என்னவென்றால், லஞ்சம் ஒழிக்கவேண்டுமென்று சொல்லும்போது எங்கே, எந்த இடத்தில் லஞ்சம் இருக்கிறது என்பதைப் பார்த்து, அதை அடக்குவதற்கு நாம் முயற்சி செய்தால் வெற்றி பெற முடியும். அது இல்லாமல் "எங்கு பார்த்தாலும் லஞ்சம் இருக்கிறது" என்று சொன் னால், ஜனங்களிடையே என்ன அபிப்பிராயம் நிலவும் என்பதை கனம் அங்கத்தினர்கள் யோசிக்கவேண்டும். லஞ்சம் வாங்காமல் இருக்கக்கூடி யவர்களும்கூட, "மற்றவர்கள் எல்லாம் லஞ்சம் வாங்கிக்கொண்டிருக்க, நாம் மட்டும் முட்டாள் போல லஞ்சம் வாங்காமல் இருக்கிறோமே" என்று எண்ணி லஞ்சம் வாங்க ஆரம்பித்தாலும் ஆரம்பிக்கக்கூடும். "எங்கும் லஞ்சம்" என்று கனம் அங்கத்தினர்கள் சொல்லிக்கொண்டே இருப்பது, அவர்களுக்கு வேண்டுமானால் நன்றாக இருக்கலாமே யொழிய, அவர்கள் அப்படிக் கூறிக்கொண்டிருந்தால், லஞ்சம் வாங்கிக்கொண் டிருப்பவர்களைத் திருத்துவதற்குப் பதிலாக, லஞ்சம் வாங்காமலிருப்பவர் களையும் லஞ்சம் வாங்கத் தூண்டக்கூடிய முறையில் அந்த மனப்பான்மை யை உண்டாக்கவேண்டுமென்று விரும்புகிறார்களா என்று கனம் அங்கத் தினர்கள் யோசித்துப் பார்க்கவேண்டும். ஆகவே, பொதுவாக "எங்கு பார்த்தாலும் லஞ்சம் இருக்கிறது" என்று கனம் அங்கத்தினர்கள் எடுத் துக் கூறுவதைவிட்டு, எங்கே லஞ்சம் இருக்கிறது என்று குறிப்பாக புள்ளி விவ ரங்களுடன் எடுத்துக் காட்டினால் அதைக் கட்டாயம் விசாரிக்கிறோம். பல விஷயங்களை விசாரித்துக்கொண்டிருக்கிறோம். லஞ்சம் வாங்கும் விஷயத் திலே கஷ்டம் என்னவென்றால் இதிலே அதிகாரிகள் மட்டும் சம்பந்தப் பட்டவர்கள் அல்ல. கொடுக்கிறவர்களுக்கும் சம்பந்தம் இருக்கிறது. காரி யம் ஆகவேண்டுமானால் லஞ்சம் கொடுப்பது என்பதும் தவறு. தங்க ளுக்கு இருக்கும் நிர்ப்பந்தம் காரணமாக லஞ்சம் கொடுக்கிறார்கள். பல

1st April 1958] [Sri C. Subramaniam]

சமயங்களில் இந்த லஞ்சம் இப்படிக் கொடுக்கப்படுகிறது. விதியை மீறி முறையை மாற்றி தங்களுக்குச் சலுகை காட்டவேண்டுமென்பதற்காக அதிகாரிகளுக்குப் பணம் கொடுத்து ஆசை காட்டி, எப்படியாவது அந்தக் காரியத்தைச் செய்துகொள்ளவேண்டுமென்று லஞ்சம் கொடுக்கிறவர்கள் முயற்சிக்கிருர்கள். கொடுக்கிறவர்களிடத்திலும் தப்பு இருக்கிறது. வாங்குகிறவர்களிடத்திலும் அதைவிட அதிக தப்பு இருக்கிறது என்பதை நாம் ஒத்துக்கொள்ளவேண்டும். சமுதாயத்தில் எவ்வளவுக்கெவ்வளவு நாணயம் இருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு லஞ்சம் குறையும். சமுதாயத்தில் எவ்வளவுக்கெவ்வளவு நாணயக் குறைவு இருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு லஞ்சம் அதிகமாகிக்கொண்டிருக்கும். எங்கும் லஞ்சம் அதிகம் என்று கனம் அங்கத்தினர் சொல்லும்போது, நம்முடைய சமுதாயத்திலும் நாணயக் குறைவு இருக்கிறதென்றுதான் ஆகும் என்று குறைகூறுகிறவர்களுக்கு நான் தெரிவித்துக்கொள்ளுகின்றேன். ஆகையால், அவர்கள் லஞ்சம் என்று சொல்லும்போது ஏதோ அதிகாரிகள் லஞ்சம் வாங்குவதாக நினைத்துக்கொண்டு சொல்லலாம். ஆனல், எங்கும் லஞ்சமயம் என்று சொல்லும்போது நம்முடைய சமுதாயத்திலே நாணயக் குறைவு இருக்கிறது என்றும், தமிழ்நாட்டில் இருக்கும் மக்களெல்லோரும் நாணயமற்றவர்கள் என்றும் சொல்வதாகத்தான் அர்த்தம் ஆகுமேதவிர வேறு அர்த்தம் கொடுக்குமா என்பதை அவர்கள் சற்று யோசித்துப் பார்க்கவேண்டும். அவர் யோசித்துப் பார்த்திருந்தால் அப்படிச் சொல்லியிருக்கமாட்டார் என்று நினைக்கிறேன். ஏதோ எழுந்து, சர்க்காருக்கு எதிராகச் சொல்லவேண்டும் என்ற முறையில், "எங்கும் லஞ்ச மயம்" என்று சொல்லிவிட்டால் இதிலே இருக்கும் குற்றங்குறைகளை வெளுத்து விளாசி விட்டதாக நினைத்துக்கொள்ளுகிருர்கள். அது தவறு என்பதை வலியுறுத்தி, முக்கியமாக கனம் ஜெகன்னதன் அவர்களுக்கு நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இம்மாதிரி அவர்கள் அடிக்கடி பேசுகிருர்கள். ஏதோ லஞ்சத்தை ஒழிப்பதைப்பற்றி தனக்குத்தான் அக்கறை இருக்கிற மாதிரி பேசுவது தவறு. நீதி மன்றத்திலும் இப்படி இருப்பதாக அவர் பேச ஆரம்பித்துவிட்டார்கள், தான் வக்கீல் என்ற காரணத்திற்காக. இன்றைக்கு நான் ஒன்று சொல்வேன். இன்றைக்கு ஒரு இலாகா நல்ல முறையில் இயங்குகிறதென்ருல் அது நீதி இலாகாதான். நீதி மன்றங்கள் தான். மற்ற இலாகாக்கள் எல்லாம் அடுத்த தரம்தான். அதை நான் ஒப்புக் கொள்கிறேன். அங்கே லஞ்சம், நிர்வாக ஊழல் என்பதாக ஒரு வழக்கு அறிஞரே சொன்னல் அது மக்களிடையே எத்தனை கலவரத்தை உண்டுபண்ணும் என்று யோசித்துப் பார்த்துச் சொல்லவேண்டும். "இவரே சொல்கிருரே. நீதி மன்றத்திற்கு அடிக்கடி போகக் கூடியவராயிற்றே. அனுபவத்தின் பேரில் சொல்லுகிருரா?" என்பதாக வெல்லாம் சந்தேகம் உண்டாகிவிடும். ஆகவே பொதுவாக எல்லா இடங்களிலும் லஞ்சம் என்று சொல்வது இதர யோக்கியமான அதிகாரிகளையும் கூடக் கெடுக்கக்கூடியதாகத்தான் அமையும். இன்னென்று சொல்ல விரும்புகிறேன். ஒரு அதிகாரி லஞ்சம் வாங்கினதாகப் புகார் செய்வார்கள். நாங்கள் உடனே அவர் பேரில் நடவடிக்கை எடுத்துக்கொள்வோம். அந்த அதிகாரி பயந்து போய் நான்கைந்து பிள்ளைகளையும் அழைத்துக்கொண்டு புகார் பண்ணியவரின் காலில் போய் விழுந்து "நான் பிள்ளைக் குட்டிக்காரன். உங்களுக்கு என்ன தவறு செய்தேன். ஏதோ தவறுதலாக நடந்து விட்டது. இப்படிப் பண்ணலாமா? என் குடும்பம் தெருவில் நிற்கும்படி ஆகிவிடுமே" என்பதாக அழுதவுடன் புகார் பண்ணினவருக்கு இரக்கம் பிறந்துவிடுகிறது. மேலதிகாரி விசாரணைக்குப் போகும்போது தைரியமாக அவன் தான் லஞ்சம் வாங்கினன் என்று சாட்சி சொல்வதில்லை. "அது என்னுங்க. யார் யாரோ சொல்லிகிட்டாங்களேயென்று நான் எழுதினேன். அப்புறம் விசாரித்துப் பார்த்தால் அவர் யோக்கியமானவராகத்தான் தெரிகிறது" என்பதாக நழுவிக்கொண்டுவிடுகிருர்கள். இது மாதிரியாக அநேக சம்பவங்கள் நடந்திருப்பது எனக்குத் தெரியும். ஆகவே லஞ்சத்தை ஒழிப்பது என்ருல் பொதுமக்கள் எல்லாவகையிலும் தைரியமாக சர்க்காருடன் ஒத்துழைக்க முன் வந்தால்தான் சாத்தியமே தவிர பொதுப்படையாகச் சொல்வதனல் மந்திரிகள் ஒன்றும் பண்ணுவதற்கில்லை.

[Sri C. Subramaniam] [1st April 1958

இன்னொரு அங்கத்தினர் நிர்வாகச் செலவு அதிகமாகிறது. சிக்கனம் செய்யவேண்டும் என்பதாகக் குறிப்பிட்டார். நானும் அதைத்தான் யோசித்தேன். நிர்வாகச் செலவை குறைக்க முடியுமா ? அதில் சிக்கனம் செய்வதற்கு வசதி இருக்கிறதா என்று பரிசீலனை செய்து பார்த்தேன். நீங்களும் வேண்டுமானால் பாருங்கள். ஒவ்வொரு இலாகாவிலும் உள்ள கெஜெட்டெட் அதிகாரிகள் எத்தனை பேர் ? எத்தனை உதவிக் காரியதரிசிகள், டெபுடி காரியதரிசிகள், இவர்களின் எண்ணிக்கையைக் குறைக்கலாமா என்பதாக யோசித்துப் பரிசீலனை செய்து பார்த்தால் நிச்சயமாக ஒரு அதிகாரியைக்கூடக் குறைக்க முடியாது என்று தெரியும். தேவைக்கு அதிகமானவர்களே எந்த இலாகாவிலும் கிடையாது. எல்லோருக்கும் வேலை இருக்கிறது. சுதந்திரம் கிடைத்த பிற்பாடு நிலைமையே தலைகீழாக மாறிப்போயிருக்கிறதென்று பலர் சொன்னார்கள். தமாஷாகக் கூட சொன்னார்கள். அதில் பெரிய உண்மை இருக்கிறது. வெள்ளைக்காரர்கள் ஆட்சி காலத்தில் ஐ.சி.எஸ். அதிகாரிகள் என்றால் நான்கு மணி வேலை செய்வார்கள். அதற்குக் கீழ் இருக்கிறவர்கள் 5 மணி வேலை செய்வார்கள். இவர்களுக்கும் கீழ் இருக்கிறவர்கள், 7 மணி, 8 மணி என்று வேலை செய்வார்கள். இப்போது அது தலை கீழாய் மாறியிருக்கிறது. மந்திரிகள் என்றால் பத்து மணி, பன்னிரண்டு மணி வேலை செய்கிறார்கள். செக்ரடரிகள், 6 மணி, எட்டு மணி என்று வேலை செய்கிறார்கள். இப்படியே கீழே போகப் போக வேலை குறைந்து கொண்டே வருகிறது. மேலே போகப் போக அதிகாரிகளின் வேலை நேரம் அதிகரித்துக்கொண்டிருக்கிறதே என்றார்கள். இதற்கு ஒரே ஒரு காரணம் மேலே உள்ள அதிகாரிகள் தங்கள் பொறுப்பை உணர்ந்து இன்றையதினம் வேலை செய்கிறார்கள் என்பதுதான். என்னுடைய அனுபவத்தை வைத்துக்கொண்டு சொல்ல முடியும். முன்பு அதிகாரிகள் செய்த வேலையைப் போல இன்றைக்குள்ள மேலதிகாரிகள் மூன்று மடங்கு, நான்கு மடங்கு வேலை செய்கிறார்கள். அதற்காக கீழே இருக்கிறவர்கள் வேலை செய்யவில்லை என்று நான் சொல்வதாக நினைக்கக்கூடாது. அப்படிச் சொல்ல வரவில்லை. மேலே இருக்கிறவர்கள் அதிகமாக வேலை செய்கிறார்கள் என்பதை வற்புறுத்திக் கூற விரும்புகிறேன். பெரும்பாலானவர்கள் இங்கும் அதிக நேரம் வேலை செய்து விட்டு பைல்களை வீட்டுக்கு எடுத்துக் கொண்டு போய் செய்து வருவதையும் நான் பார்த்திருக்கிறேன். இங்கே பேப்பர் படித்துவிட்டு வீட்டுக்கு எடுத்துக்கொண்டு போய் வேலை செய்து வருவதாக ஏமாற்றுகிறார்கள் என்று நினைக்கமுடியாது. ஏமாற்றுபவர்கள் ஒன்றிரண்டு பேர்கள் எங்கும் இருக்கலாம். ஆகவே நிர்வாகத்தில் சிக்கனம் செய்ய இடமில்லை.

அதோடு இன்னொன்று, இருக்கிற முறையை மாற்றி சிக்கனம் செய்ய வசதி உண்டா என்று பார்க்கலாம். இப்போது இருக்கிற முறை என்ன ? அனுபவத்தின் பேரில் முதலில் ஒரு முறையை வகுத்து, அதில் உள்ள குறைபாடுகளை எல்லாம் கொஞ்சம் கொஞ்சமாக நிவர்த்தி செய்துகொண்டே வந்து இன்றைக்கு உள்ள சூழ்நிலைக்கு ஏற்ப ஒரு முறை அமைந்திருக்கிறது. இது என்ன முறை? ''டாடான் ஹாம்'' முறைதானே? என்று சொன்னார்கள். இது டாடான்ஹாம் முறை தான். ஆனால் இன்றைக்குள்ள சூழ்நிலைக்கு ஏற்ப எந்த எந்த வகைகளில் எல்லாம் திருத்தி அமைக்கப்பட்டிருக்கிறது என்பதை அநுபவத்தினால் தெரிந்து கொண்டிருந்தால் இப்படிச் சொல்லியிருக்கமாட்டார்கள். ரெட் டேபிஸம் போகவேண்டும் என்று இந்த சிவப்பு நாடாவை அறுத்துவிடலாம். இதை அறுத்துவிட்டால் எத்தனை தீங்கு உண்டாகும் என்பதையும் சிந்தித்து பார்க்கவேண்டும். இதற்குப் பல உதாரணங்கள் சொல்லமுடியும். இன்றைக்கு லைப் இன்ஷூரன்ஸ் கார்ப்பரேஷனில் நடந்த தீங்கு சிவப்பு நாடாவை அறுத்த காரணத்தினால் தான். செக்ரடரியோடு பார்த்துப் பேசி உத்திரவு போட்டால் போதாதா எண்கிறார்கள். மந்திரி ஒன்று சொல்லுகிறார். அவர் சொன்னதை வைத்துக் கொண்டு செக்ரடரி உத்தரவு போட்டுவிடுகிறார். என்ன உத்தரவு போட்டார், மந்திரி என்ன சொன்னார், மந்திரி சொன்ன உத்தரவைத்தான் போட்டாரா என்பது எல்லாம் எப்படித் தெரியும். மந்திரியிடமே நாளைக்கு என்ன சொன்னீர்கள் என்று கேட்டால் தெரியாமல் இருக்கலாம். "நீங்கள் இப்படித்தானே சொன்னீர்கள்? " என செக்ரட்ரி தப்பான உத்தரவைப்

போட்டுவிட்டு சொல்லிவிட்டால் இல்லை என்று மந்திரியினால் மறுக்க முடியாது போகும். ஆகவே இந்தமாதிரியான சங்கடங்கள் எல்லாம் உண்டாகாமல் இருக்க இப்போதுள்ள முறை என்ன? மந்திரி ஏதாவது சொன்னால் அவர் சொன்னதை அப்படியே எழுதி, அதில் உள்ள சாதக பாதகங்களை நன்றாக ஆராய்ந்து திரும்பவும் அந்த மந்திரிக்குப் போக வேண்டும், அவர் அதைப் பார்த்து இன்ன உத்தரவு என்று போடுவார், உத்தரவு போட்டவுடன் திரும்ப அது மந்திரிக்கு வரவேண்டும் என்பதாக வெல்லாம் இருக்கிறது. இதனால் கொஞ்சம் காலதாமதம் ஆகிறது என்றாலும் பெரிய கெடுதல்கள் உண்டாவதற்கு இடமே இல்லாமல் இருக்கிறது என்பதைக் கனம் அங்கத்தினர்கள் நன்றாக உணர்ந்து கொள்ள வேண்டும். ஆகவே, சிக்கனத்திற்கு இருக்கிற முறையை மாற்றி அமைப்பது என்றால் அதைக் கொஞ்சம் யோசித்தே பரிசீலனை செய்யவேண்டும். அவசரப்படக்கூடாது. இதைப்பற்றி நன்றாக பரிசீலனை செய்து பார்க்கப் படும்.

நிர்வாகம் திறமையாகவும், நேர்மையாகவும் நடைபெற வேண்டுமென்று அங்கத்தினர்கள் விரும்பினால் நான் அதை வரவேற்கிறேன். அதற்காகத்தான் நாங்களும் பாடு பட்டு வருகிறோம். ஆனால் எங்களையும் மீறி தவறுகள் நடக்கவில்லை என்று நாங்கள் சொல்லவில்லை. எங்களையும் மீறி சில தவறுகள் நடந்து விடுகின்றன. ஆனால் அந்தத் தவறுகள் நடந்ததற்குப் பிற்பாடு தொடர்ந்து அந்த தவறுகளை செய்து கொண்டு போவது சரியல்ல. தவறை உணர்ந்ததும் அதை திருத்திக் கொள்வது தான் நல்ல முறை. அதைச் செய்வதற்கு எங்களால் ஆனதை செய்து வருகிறோம். ஆகவே, இங்கு குறைகள் சொல்லப்பட்டதும், சிலர் கோபித்துக் கொண்டதும் இந்த அரசாங்கம் இன்னும் திறமையாகவும், நேர்மையாகவும் நடக்க வேண்டுமென்ற காரணத்திற்காகத்தான் என்று எடுத்துக் கொள்வதோடு நான் ஒன்றும் கோபித்துக் கொள்ளவில்லை என்று கோவிந்தசுவாமியிடம் சொல்லிக் கொள்ள நினைக்கிறேன். அதோடு, எங்கள் பேரில் உள்ள அக்கரையினால், தமிழ் நாடு மேலும் மேலும் சிறப்புற்று ஓங்கி வளர வேண்டுமென்ற விருப்பத்தின் பேரில் தான் குறைகள் எடுத்துச் சொல்லப்பட்டன என்று எடுத்துக் கொண்டு அதோடு அதை ஒரு ஆசியாகவும் எடுத்துக் கொண்டு உண்மையான குற்றங்குறைகளைத் திருத்திக் கொண்டு நிர்வாகத்தை இன்னும் நல்ல முறையில் நடத்திச் செல்ல என்றென்றும் முயற்சி செய்வோம் என்று சொல்லிக் கொண்டு, இவ்வளவு சொன்னதற்கு பிற்பாடும் இந்த வெட்டுப் பிரேரணையை வற்புறுத்த வேண்டுமா என்று அவர்கள் ஆலோசித்துப் பார்த்து, அப்படிச் செய்வது அவசியமில்லை என்று நினைத்தால் அந்த வெட்டுப் பிரேரணையை வாபஸ் பெற்றுக் கொண்டு இந்த மான்யக் கோரிக்கையை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

MR. SPEAKER : Is the hon. Member Sri T. S. Ramaswamy Pillai withdrawing his cut motion?

SRI T. S. RAMASWAMY PILLAI : I am pressing it, Sir.

MR. SPEAKER : The question is—

'That the allotment of Rs. 97,68,700 under Demand No. IX —Head of State, Ministers and Headquarters staff be reduced by Rs. 100'.

The cut motion was put and lost.

MR. SPEAKER : The question is—

'That the Government be granted a sum not exceeding Rs. 97,68,700 under Demand IX—Head of State, Ministers and Headquarters staff'.

The Demand was put and declared carried.

A poll was demanded and the division bell was rung.

MR. SPEAKER : I will again put the Demand to the vote of the House. The question is—

'That the Government be granted a sum not exceeding Rs. 97,68,700 under Demand IX—Head of State, Ministers and Headquarters staff '.

The Demand was put and carried and the grant was made.

## VI.—STATEMENT BY THE HON. FINANCE MINISTER *RE* DISTURBANCES IN ANNAMALAI UNIVERSITY.

1.25 p.m. THE HON. SRI C. SUBRAMANIAM : சபாநாயகர் அவர்களே, அண்ணாமலை பல்கலைக்கழகத்தில் நடந்த சில நிகழ்ச்சிகளைப் பற்றி மிகவும் வருத்தத்துடன் இந்த சட்டசபையில் சில தகவல்கள் கொடுக்க வேண்டுமென்று விரும்புகிறேன். எனக்கு, 29, 30ம் தேதிகள் இரண்டு நாட்கள் அண்ணாமலை பல்கலைக்கழகத்திற்கு செல்ல வேண்டிய வாய்ப்பு கிடைத்தது. இந்த நிகழ்ச்சிகள் நான் அங்கு இருந்தபோது நடந்தவைகள். இந்த சபையில் அவைகளைப் பற்றி தெரிவிக்கும்போது, அங்கு இருக்கக் கூடிய " வைஸ் சான்ஸ்சலரின் " அறிக்கையையும், அங்கு இருக்கக்கூடிய கலெக்டரின் அறிக்கையையும் பெற்று அதிகாரபூர்வமான முறையிலே இந்த அறிக்கையைக் கொடுக்க வேண்டுமென்ற காரணத்தினால்தான் இன்று வரையில் கூட அது ஒத்தி வைக்கப்பட்டது. இல்லாவிடில் நேற்று நான் திரும்பி வந்தவுடனேயே அங்கு நடந்த நிகழ்ச்சிகளைப்பற்றி இந்த சபைக்கு தெரிவித்திருப்பேன். அந்த நிகழ்ச்சிகள் நடந்ததின் காரணமாக இன்று அந்த பல்கலைக்கழகம் மூடப்பட்டிருக்கிறது, கால வரையறையின்றி. அதனால் மாணவர்களுக்கு பெரும் கஷ்டம் ஏற்பட்டிருக்கிறது என்பதை எல்லோரும் உணருகிறோம். ஆனால் சில சமயங்களில் ரொம்ப கடுமையான வியாதிக்கு கடுமையான வைத்தியம் செய்துதான் ஆகவேண்டும். அந்த முறையில்தான் அங்கு இருக்கக்கூடிய பல்கலைக் கழகத்தார் தீர ஆலோசனை செய்து இந்த முடிவிற்கு வந்திருக்கிறார்கள். இந்த முடிவிற்கு வேறு ஒருவரும், வெளியில் உள்ளவர்கள் பொறுப்பில்லை. அங்குள்ள "ஸிண்டிகேட்" இதைப் பற்றி ஆலோசித்து அவர்களின் முடிவின் பேரில்தான் அது மூடப்பட்டிருக்கிறது. அங்கு நடந்த நிகழ்ச்சிகளைப் பற்றி நான் சொல்லும்போது, என்ன காரணத்தால் அந்த நிகழ்ச்சிகள் ஏற்பட்டன என்பதைப் பற்றி நான் இன்று ஆராயப்போவதில்லை. 29, 30 தேதிகளில் அங்கு நடந்த நிகழ்ச்சிகளைப் பற்றி மட்டும் குறிப்பிட்டு விட்டு இதுபற்றி என்ன செய்ய வேண்டும் என்பதைப் பற்றியும், இந்த மாதிரி நிகழ்ச்சிகள் இனிமேல் நடக்காமல் பார்த்துக் கொள்வதற்கும், இப்பொழுது நடந்த நிகழ்ச்சிகளுக்கு எந்த முறையில் பரிகாரம் காண வேண்டும் என்பதைப் பற்றியும் ஒரு சின்ன ஆலோசனை மட்டும் சொல்லிக் கொண்டு முடித்து விடலாம் என்று நினைக்கிறேன். 29-ம் தேதி நான் அண்ணாமலை பல்கலைக்கழகத்திற்குச் சென்றிருந்தபோது காலையில் பல நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்யப்பட்டது. அந்த நிகழ்ச்சிகளில் மாணவர்கள் எல்லோரும் கலந்து கொண்டார்கள். ரொம்பக் கட்டுபாடாகவும், ஒழுங்காகவும் நடந்து கொண்டதைப் பார்த்து நான் ஓரளவு பெருமையும்கூட பட்டுக் கொண்டேன். அன்று இரவு மாணவிகள் விடுதியில் ஆண்டு விழா கொண்டாடப்பட்டது. அந்த ஆண்டு விழாவில் விழாவிற்குப் பிற்பாடு சில கலை நிகழ்ச்சிகள் அங்கு ஏற்பாடு செய்திருந்தார்கள் அங்கு இருக்கக் கூடிய அரங்கிலே. அதைப் பார்ப்பதற்கு மாணவர்களும் வர வேண்டுமென்று விரும்பினார்கள். மாணவர்கள் விடுதியில் இருக்கக் கூடியவர்கள். இரவு 10 மணிக்கு மேல் வெளியில் இருப்பது என்றால் அதற்கு உத்தரவு பெற்றுக் கொண்டுதான் போக வேண்டுமென்று ஒரு விதி இருக்கிறது. ஆகவே, வார்டனிடம் இதைப் பற்றி தெரிவித்தபோது எல்லோரும் உத்தரவு பெற்று போகலாம் என்று தெரிவித்தார்கள். அநேகமாக எல்லா